




உ

தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] பரிதாவி வைகாசி (14-5-72) [கருணை 8

## எமது குறிக்கோள்

மீண்டும் எமது குறிக்கோளை, பணிவோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

மக்களின் உள்ளத்தில் ஆத்மிக வேட்கையை எழுப்புவதே "அருள்" பத்திரிகையின் தலையாய குறிக்கோள்.

சைவம், வைஷ்ணவம், சாக்தம், கௌமாரம் போன்ற சமயங்கள் அனைத்தையும்; துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம் போன்ற சித்தாந்தங்கள் அனைத்தையும் என்றும் நாம் சமத்துவ நோக்குடனேயே அணுகி வருவோம்.

மக்களிடையே தெய்வபக்தி, அறவொழுக்கம், சாதனையில் ஆர்வம் இவை வளரவேண்டும் என்பதே எமது ஆசை. அத்துறையில் சிறப்பான பணிபுரிவதற்கான வாய்ப்பையும், ஆற்றலையும் இறைவன் எமக்கு அன்பர்களின் வாயிலாக அருள வேண்டுமாய்ப் பிரார்த்திக்கின்றோம்.



| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-87.

" ஸர்வமங்களா "

# ஸ்ரீ ராஜராஜேச்வரீ ஆலயம்

## ஸ்ரீ ராஜராஜேச்வரீ நகர், நங்கைநல்லூர்.

ஸர்வ மங்களங்களையும் தரவல்ல
ஸர்வ மங்கள வடிவினளான
ஸர்வமங்களா ஸ்ரீராஜராஜேச்வரி
அம்பிகை தனக்கென்றே அமைத்துக்கொண்ட
அற்புதமான ஆலயம் இது!

மந்திர ஸித்திபெற்ற மகா புண்ணிய சீலர்,
உத்தம தேவி உபாஸகர் வெங்குபட்கு
ஸ்ரீலஸ்ரீ ராஜகோபால ஸ்வாமிகளால்
அம்பிகையின் அருளாணைப்படி அழகுற
நிறுவப்பெற்ற நிகரில்லா ஆலயம் இது!

51 சக்தி பீடங்களையும் ஏக காலத்தில்
தரிசனம் செய்த மகத்தான பலனைத்
தரக்கூடிய, யந்திரங்கள் பிரதிஷ்டை
செய்யப்பெற்ற அதிசிறப்பு நிறைந்த ஆலயம் இது!

ஸர்வமங்களா ஸ்ரீகணபதியும் ஸர்வமங்களா
ஸ்ரீபஞ்சமுக ஆஞ்சநேயரும் அடியார்களுக்கு வேண்டிய
வரங்களை வாரி வாரி வழங்கும்
சக்தி மிகுந்த ஆலயம் இது!

அன்பர்களின் அகப்பிணிகளை மட்டுமின்றி,
உடற்பிணிகளையும் உடனே தீர்த்துவைக்கும்
ஸ்ரீவருண மஹா தந்வந்திரி தீர்த்தம்
விளங்கும் விசேஷமான ஆலயம் இது!

பரத கண்டத்திலேயே ஸ்ரீசக்ர விதிப்படி
கட்டப்பெற்ற பராசக்தியின் முதலாவது ஆலயம் இது!

---

* இவ் வாலயம் சென்னை பரங்கிமலை-மீனம்பாக்கம் இரெயில்வே நிலையங்களுக்கு இடையில் உள்ளது. சென்னை டவுனிலிருந்து 70நெ பஸ்ஸும், மயிலாப்பூரிலிருந்து 5D பஸ்ஸும், தியாகராயநகரிலிருந்து 5C பஸ்ஸும நங்கைநல்லூர் வழி வருகின்றன. ஆலயத்திற்கு வருவோர் இப் பஸ்களில் வரலாம். பரங்கிமலை இரெயில்வே நிலயத்தி லிருந்தும் வரலாம்.

# பக்தி மார்க்கம்



**பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்**

வேறு சிந்தையே அற்ற பற்று இறைவனிடம் ஏற்படுமாயின் அதுவே பக்தி எனப்படும். பாரியை ஒருத்தி தன்பர்த்தாவின் மீது கொள்ளும்பற்றுப்போன்றது அது. கலப்பேதுமற்ற பக்தியை இறைவன் மீது கொள்ளுவது வெகு கடினமாகும். அத்தகைய பக்தி ஏற்பட்டால் அதன் மூலம் உள்ளமும் உயிரும் இறைவனிடம் லயித்துப் போகின்றன.

கடவுள் மீது கொள்ளும் அன்பு காரணமாக ஒரு மனிதன் உலகத்தையும், தனக்கு மிகப் பிரியமான தன் சரீரத்தையும் கூட மறந்து விட நேருமாயின் அந்த அன்பு பிரேமை எனப்படும். சைதன்னிய தேவரிடம் பிரேமை மிளிர்ந்தது.

ராகபக்தி உன்னிடத்து இருக்குமாயின் கடவுள் அதனுல் ஈர்க்கப்படாமல் இருக்க முடியாது. ராகபக்தி என்பது கடவுளிடம் கொள்ளும் அன்புடன் அவரிடத்து வெறிபோன்ற பற்று இணைந்ததாகும். தன்னுடைய பக்தர்கள் காட்டும் அன்பிடத்துக் கடவுள் எவ்வளவு பிரியம் கொள்ளுகின்ருர் தெரியுமா? பிண்ணுக்குக் கலந்துள்ள வைக்கோலிடத்துப் பசுவுக்கு உள்ள பிரியம்போன்றது அது. பசு அத்தகைய உணவைப் பேராவலுடன் உள்ளே தள்ளுகின்றது.

பக்தனுடைய இதய பீடம் பகவானுடைய வாசஸ்தானம் என்பதை நீ நினைவில் இருத்த வேண்டும். பகவான் எல்லா ஜீவர்களிடத்தும் இருக்கின்ருர் என்பதில், ஐயமில்லைதான். ஆனுல் பக்தனுடைய இதயத்தில் அவர் தம்மை விசேஷமாக ஆவிர்ப்பவித்துக் கொள்ளுகின்ருர். பக்தனின் இதயம் பகவானுடைய வாச அறை.

பக்தியோகம் இந்த யுகத்துக்கென விதிக்கப்பட்டுள்ளது. இந்த நெறியைப் பின்பற்றுவதால், மற்ற நெறிகளைப் பின்பற்றுவதன்மூலம் அடைவதைக் காட்டிலும் இன்னமும் எளிதாகக் கடவுளை அடையலாம். ஞான நெறி, கர்மநெறி ஆகியவற்றைப் பின்பற்றுவதால் நிச்சயமாகக் கடவுளை அடையலாமெனினும் அவை வெகு கடினமான மார்க்கங்களாகும்.

பக்தியோகம் என்பது என்ன? இறைவனுடைய திருநாமத்தை ஓதியும் அவர் புகழ்பாடியும் இறைவனிடத்து மனதை இருத்திவைத்தலே பக்தியாகும். மேலே ஏதும் பூசப்பெருத கண்ணுடியின்மீது உருவமெதையும் பதியவைக்க முடியாது. ஒரு கருப்பான சுரையம் தடவப்பெற்ற கண்ணுடியின் மீதுதான் அதைப் பதியவைக்கலாம். போட்டோ படமெடுப்பவர் அவ்வாறுதான் செய்வர். பகவத் பக்தி அந்தக் கருப்பான கரையம் போன்றது.

இந்திரிய விஷயங்களிற் பற்றுக் குறைவதற்கேற்ப அதே அளவில் பகவத் பக்தியானது அதிகரிக்கும்.

அன்பு மூன்று வகைப்படும். சுயநலமற்றது (ஸமர்த்தமானது) பரஸ்பரப்போக்கினது (ஸமஞ்சஸமானது), தன்னலப் பாங்கினது (ஸாதாரணமானது) என முவ்வகைப்படும். சுயநலமற்ற அன்பு அதி உத்தமமானது. இந்நிலையில் அன்பன் அன்பு கொண்டுள்ள பொருளின் நலத்தை மட்டுமே நாடுகின்முன். அதனுல் தனக்குத் துயரங்களும் கஷ்டங்களும் வந்துறுகின்றனவா என்பதைப் பற்றி அவன் கவலையுறுவதில்லை. இரண்டாவது வகையான அன்பு பரஸ்பர அன்பு ஆகும். இந்நிலையில் அன்பன் தான் அன்புகொள்ளும் பொருளின் சுகத்தை விரும்புவதுடன் தான் சுகமுறுவதிலும் ஒரு கண் வைத்திருப்பான். சுயநல அன்பு மிக அதமமானது. அது ஒரு மனிதன் தன்னுடைய சுகத்தை மட்டுமே கருத்திற் கொள்ளுமாறு செய்விக்கின்றது; அன்பு கொள்ளும் பொருளின் இன்பத்தையோ துன்பத்தையோ பற்றி ஒரு சிறிதும் பொருட்படுத்தாதவாறு பண்ணுகின்றது.

உலகப்பற்று என்பதன் அடையாளம் லவலேசமிருந்தாலும் ஒருவன் கடவுளைக் காணமுடியாது. நெருப்புக்குச்சிகள் ஈரமாக இருந்தால், ஆயிரம் குச்சிகளைப் பெட்டியின் புறத்தில் உரைத்தாலும் அவை தீப்பிடிக்கா. குச்சிகள் பலவற்றை வீண்படுத்துவதேயாகும் அம்முயற்சி. உலகப்பற்றில் தோய்ந்துகிடக்கும் மனம் ஒரு ஈர நெருப்புக்குச்சியாகும்.

பக்தனின் வலிமை எதில் உளது? அவன் கடவுளின் குழந்தையாகிமுன். அவன் சிந்தும் பக்திக் கண்ணீர்களே அவனுடைய வலிவுமிக்க ஆயுதமாகும்.

நீ பித்தனுக இருந்தேயாக வேண்டுமானுல் உலக விஷயங்களுக்காகப் பைத்தியம் பிடித்தவனுக ஏனே நீ இருக்க வேண்டும்? பைத்தியம் பிடித்தவனுக இருந்தேயாக வேண்டுமானுல் கடவுளுக்காக மட்டுமே பைத்தியம் பிடித்தவனுக இருப்பாயாக.

சுத்த ஞானமும் சுத்த பக்தியும் ஒன்றேயாகும். இரண்டும் சாதகர்களை ஒரே குறிக்குத்தான்

அழைத்துச் செல்லுகின்றன. இரண்டினுள் பக்திமார்க்கம் உளதே, அது மற்றதைவிட மிக எளியதாகும்.

ஞானம் ஆண் மகன் ஒருவனை யொத்தது. பக்தி பெண் மணியொருத்தியைப் போன்றது. கடவுளுடைய இல்லத்தின் நுழைவுப் பகுதியில் உள்ள அதிதிவிடுதி வரையிலும் செல்லத்தான் ஞானத்திற்கு அதிகாரம் உண்டு ஆனுல் ஆண்டவனுடைய அந்தப்புரப் பகுதிகளுக்கு பக்தியானது செல்லக்கூடும்.

சிறந்த பகவத் பக்தன் யார்? பிரம்மசாக்ஷாத்காரம் பெற்றுப் பின்னர் கடவுளே எல்லா ஜீவர்களாகவும் ஜகத்தாகவும் இருபத்து நான்கு தத்துவங்களாகவும் ஆகியுள்ளார் என்ற காட்சியுடையவனே சிறந்த பக்தன் ஆவான். முதலில் விசாரம் செய்யவேண்டும் — நேதி, நேதி (இது அல்ல) என்று கூறி விசாரம் செய்து மாடியை அடைந்துவிடவேண்டும். அதன் பின்னர் காட்சி ஒன்று ஏற்படுகிறது. மாடி ஆனது எந்தப் பொருள் கொண்டு ஆக்கப்பட்டுள்ளதோ அதே பொருள் கொண்டுதான், அதே செங்கல் அதே சுண்ணும்பு அதே செங்கல்தூள் கொண்டுதான் படிகளும் ஆக்கப்பட்டுள்ளன என்ற காட்சி பெறப்படுகிறது. பிரம்மமே ஜீவர்கள் ஜகத் ஆகிய இவை எல்லாமுமாய் ஆகியுள்ளது என்பதை பக்தன் அறிந்துணருகின்ருன்.





தூக்கங் கெடுத்தான் சுகங்கொடுத்தா னென்னுளத்தே
ஏக்கந் தவிர்த்தா னிருளறுத்தான்—ஆக்கமிகத்
தந்தா னெனையீன்ற தந்தையே யென்றழைக்க
வந்தானென்னப்பன் மகிழ்ந்து. —திருவருட்பா

# உலகிற்கெல்லாம் தாய்

## சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர்

ஸ்ரீபகவானை பெண்ணின் உருவமாய் ஆராதிப்பது நமது வைதிகமான இந்து மதத்தில்தான். வேதம் அப்படிப்பட்ட ஸ்திரீ தெய்வத்தை சரணமடைந்தால் தான், நமது துக்கங்களெல்லாம் விலகுமென, கூறியுள்ளது.

ஆதலால்தான் ஆதிசங்கரர் முதலிய மஹான்களெல்லாம் காஞ்சியில் ஸ்ரீகாமாக்ஷி ஸன்னிதியில் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை போன்ற பல பிரதிஷ்டைகளை செய்துள்ளனர். யாவருக்கும் ரத்தத்திலேயே ஸ்ரீ அம்பாளிடத்தில் அன்பு தோய்ந்து இருக்கிறது. ஆதலால் தான் தொட்டிலில் படுத்திருக்கும் சிறு குழந்தைகள் பசுக்கள் முதலியன தங்கள் கஷ்டத்தை போக்கிக் கொள்ள அம்மா என அழைப்பதைக் காண்கிறோம். கதியற்று பிச்சை யெடுப்பவர்கள் கூட 'அம்மா பிச்சை' எனத்தான் கேட்கின்றனர்.

அதனால்தான் லலிதாஸஹஸ்ர நாமத்தில் முதல் நாமாவில் முதல் அர்ச்சனை ஸ்ரீ மாத்ரே நம: 'தாய்க்கு நமஸ்காரம்' என ஆரம்பிக்கப்பட்டுள்ளது.

நமது துயரங்களைப் போக்கிக் கொள்ள தாயான ஸ்ரீ அம்பாளைத்தான் நமஸ்கரிக்க வேண்டும். மேலும் நமது தலையில் எழுதிய எழுத்தை வேறு எந்த தெய்வங்களாலும் அழிக்க முடியாது. ஸ்ரீ ராஜ ராஜேச்வரீ அழித்து விடுவாள் என ஸ்ரீ ஸ்காந்தபுராணம்

ஐந்தோரஸீகே தாத்ரா
யான்யக்ஷராண்ய சிவாநி து
ந்யஸ்தானி யத்ப்ரஸாதேன
விலியந்தேது தாந்நுவ:

என்று கூறுகிறது

மனிதன் தலையில் பிரம்மதேவனுல் எழுதப்பட்ட கெட்ட எழுத்துக்கள் ஸ்ரீ அம்பாளுடைய அருளால் அழிந்து விடுமென கூறப்பட்டுள்ளது. மேலும் ஸ்ரீ ராஜ ராஜேச்வரியை ஆராதித்து வந்தால் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு உருவுடன், பெயருடன் வந்து பாதுகாப்பாளென கூறப்பட்டுள்ளது.

அரசர்கள், பிரமுகர்கள் வீட்டில், மஹாலக்ஷ்மியாகவும்; யுத்த சமயத்தில் ஜெயலக்ஷ்மியாகவும்; வழியில் செல்லுகையில் க்ஷேமங்

கரீ எனப் பெயருள்ளவளாகவும், ராஹஸர்கள், யானே, ஸர்ப்பங்கள் இவற்றுடன் கூடியதும், அடர்ந்த காடுகள் நிரம்பியதுமான மலேகளில் செல்லும்போது, சபரீயென்ற பெயருடன் (வேட ஜாதிக்கு உரிய உருவத்துடன்) கூடியவராகவும், பூதங்கள், பிசாசு, நரி முதலிய துஷ்ட மிருகங்கள், இவற்றிஞல் பயமேற்பட்டபோது மஹாபைரவியாகவும், மனதில் கலக்கமேற்பட்டபோது தாரா என்ற பெயருடன் ஆபத்துக்கள் ஏற்படாமல் தடுத்து ஸ்ரீ அம்பாள் வந்து ரக்ஷிப்பாள்.

அவ்வாறு நாம் த்யானம் செய்ய வேண்டும். அவ்வாறு த்யானம் செய்கிறவர்கள் ஆபத்துக்களிலிருந்தும் விடுபடுவார்கள்.

ஸ்ரீ அம்பாளின் ஸன்னிதியில் பிரதி வெள்ளிக் கிழமைகளிலும் கணபதி ஹோமமும் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி மூலமந்திரத்தால் ஹோமமும், பிரதிதினம் மாலேயில் வேதவித்துக்களேக் கொண்டு நித்யவேதபாராயணமும், நடத்த வேண்டியது ரொம்ப அவசியமாகும். இதஞல் தற்காலம் நவக்ரஹ ஸஞ்சாரத்தால் ஏற்படும் தீங்குகள் உடன் நீங்கும். ஆலய தர்மத்திற்கு உதவி செய்யும் குடும்பதினருக்கு யமபயமே இல்லேயென ஸ்ரீ மஹாபாரதம் கூறுகிறது.

*

# சோதிர்லிங்கத் தலங்கள்

## ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞானசம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள் தருமையாதீனம்

(7) இராமேசுவரம் :

தமிழ்நாட்டின் தென் பகுதியில் வங்கக் கடலில் அமைந்த ஒரு சிறு தீவாக உள்ளது இத்தலம். கடல் நீராட்டு இத்தலத்திற் சிறப்பு மிக்கது. ஆலயத்துள் பதிஞன்கு நீர்த்தேக்கங்களுக்கு மேல் உள்ளன. எல்லாவற்றிலும் கோடி தீர்த்தம் மிக்க சிறப்பு வாய்ந்தது. காசி யாத்திரை செய்தவர்கள், இராமேசுவர யாத்திரை செய்தால்தான் யாத்திரை நிறைவு பெற்றுப்பயனடைகின்றனர் என்பது ஐதிகம். தமிழ்நாட்டிலுள்ள சோதிலிங்கத்தலம் இது ஒன்றே என்பது குறிப்பிடத் தக்கது. ஞானசம்பந்தரும், நாவரசரும் பாடியுள்ள நன்மை மிக்க தலம். ஆலயம் மிகப் பெரியது. உலகிலேயே மிகப் பெரிய பிராகாரத்தை உடையது. இராவணனைக் கொன்ற பழி நீங்குவதற்குக் கழுவாயாக இராமன் மணலால் சிவலிங்கம் அமைத்து வழிபட்ட சிறப்புடைமையின் இராமேசுவரம் எனப் பெயர் பெற்றது. இராவணனை அழிப்பதற்கு முன்பு அவனை அழிப்பதற்காகவே இங்குள்ள இறைவனை இராமன் வழிபட்டு அருள் பெற்ருர் என்பதும் மற்ருெரு வரலாருகும்.

(8) நாகேசம் :

மகாராட்டிர மாநிலத்தில் கோண்டி ரெயில் நிலையத்திலிருந்து 14 கல் தொலைவிலுள்ளது, நாகேசமென்னும் இத்தலம். சிவலிங்கத்தின் கோமுகம் கிழக்கு முகமாக இத்தலத்தில் திரும்பியுள்ளது; நாமதேவ சுவாமிகளின் பெருமையை வெளிப்படுத்துவதற்காகச் சிவபிரான் இவ்வாறு திரும்பியுள்ளார் என்பது ஐதிகம். சிவலிங்கம் ஒரு மலைக் குகைக்குள் இடம் பெற்றுள்ளது. மோகினி வடிவங் கொண்ட திருமாலும், பிட்சாடனர் வடிவங் கொண்ட சிவபெருமானும், தாருகாவனம் சென்ற வரலாறு இத்தலத்தோடு தொடர்பு படுத்திப் பேசப்படுகிறது. அயோத்திக்கருகிலுள்ள சரயூ நதிக்கரையில் நாகேசுவரர் என்ற பெயரோடு ஒரு சிவலிங்கம் உண்டு. இதனையே நாகேசம் எனச் சிலர் கூறுவர். ஆனல், வரலாற்றுப்படி ஔண்டாவில் உள்ள சிவலிங்கமே சோதிலிங்கம்

என உறுதிப்படுத்தப் பட்டுள்ளது.

(9) விசுவேசம் :

வருணை, அசி என்ற இரு நதிகளின் சங்கமத்திற்கு இடையில் உள்ளதால் இத்தலம் வாரணாசி எனப்பட்டது. கர்மங்களைப் போக்குவதாலும், சிவஞானத்தால் உயிர்கள் ஒளிபெறுவதாலும், காசி எனவும் இது பெயர் பெற்றது. இதுஉத்தரப் பிரதேசத்தில் அமைந்துள்ளது. முத்தி தரும் தலங்களில் இதுவும் ஒன்று. கங்கை இத்தலத்தில் உத்தர வாகினியாக (வடக்கு நோக்கி)ச் செல்கிறது. இவ்வாறு செல்வது சிறப்புடையதாகும். கங்கையின் மேற்குக் கரையில் விசுவநாதர் ஆலயமும், கேதாரநாதர் ஆலயமும் சிறப்புடையவை. வருணை, அசி என்ற இரு நதிக்கும் இடையில் 64 தீர்த்தக் கட்டங்கள் அமைந்துள்ளன. அவற்றுள் மணிகர்ணிகா கட்டம் மிகசிறந்தது. அன்னபூரணி, விசாலாட்சி, காலபைரவர், துண்டிராஜ கணபதி முதலிய மூர்த்திகட்குத் தனித்தனிக்கோயில்கள் உள்ளன. இத்தலத்தில் இறப்பவர்கள் முத்திபெறுவர் என்பது வரலாறு.

(10) திரியம்பகம் :

மகாராஷ்டிர மாநிலத்தில் நாசிக்கிலிருந்து தென் கிழக்கில் 18 கல் தொலைவில் உள்ளது இத்தலம். பிரமகிரி என்ற மலையைச் சார்ந்துள்ளது இத்தலம். இம்மலையில் கோதாவரி, அகல்யா, வைதர்ணு, மேற்கு நோக்கிச்செல்லும் கங்கை ஆகியவை உற்பத்தியாகின்றன. அங்குள்ள காட்டில் மூன்று லிங்கங்கள் மூன்று கண் போல் உள்ளன. இதனால் திரியம்பகம் எனப் பெயர் வந்ததென்பர். பிரமன் சிவபெருமானின் திருமுடியைக் கண்டதாகப் பொய் உரைத்ததால், அவனை மலையாகுமாறு சபித்தார் பெருமான். பிரமனது தவத்திற்கு இரங்கிப் பேத பாவனையின்றிப் பிரமகிரியில் இருப்பதாக அருள் பாலித்தார். இது காரணமாகவே இம்மலைக்குப் பிரமகிரி எனப்பெயர் வந்ததென்பர். அஷ்டபைரவர் முதலிய திருவுருவங்கள் இங்கே உள்ளன. மாக்கல்லான லிங்கத்திற்குரிய பீடம் மட்டுமே உள்ளது. பீடத்தின் நடுவில் ஒரு சிறு செம்பு கொள்ளக்கூடியதாக ஒரு குழி உண்டு. இதனுள் மூன்று சிவலிங்க வடிவங்கள் இருக்கின்றன. இக்குழியிலிருந்து கங்கை வெளிப்படுகிறது.

(11) கேதாரம் :

உத்தரப் பிரதேசத்தில் இமய மலையில் உள்ளது திருக்கேதாரம். தெற்கு நோக்கிய சந்நிதி. திருஞான சம்பந்தர், சுந்தரர் ஆகிய இருவராலும் பாடப் பெற்ற சிறப்புடையது. அரித்துவாரம் வழியாக ருத்திரப்பிரயாகை வரை நடந்து செல்ல வேண்டும். குப்த காசி வரை பேருந்துகளில் செல்லலாம். கேதாரம் செல்லும் வழியில் இந்திர நீல பருப்பதம், அநேகதங்காவதம் ஆகிய பாடல் பெற்ற தலங்களையும் தரிசிக்கலாம். 'கேதார' என்னும் சொல் சிவபெருமான் கங்கை தேவியை முடியில் வைத்திருக்கிறன் என்பதை உணர்த்தும். கேதார நாதர் ஆலயம், கடல் மட்டத்திலிருந்து 11,750 அடி உயரத்தில் உள்ளது. இங்குள்ள விஷ்ணுவைத் தரிசித்தால் பத்ரியிலுள்ள நாராயணனைத் தரிசித்த பலன் உண்டு. திருமால் நர நாராயண வடிவத்தில் இருந்து பார்த்திவ லிங்கத்தில் சிவபெருமானைப் பூசித்து, 'கேதார மலை

யில் தேவரீர் எழுத்தருளியிருக்க வேண்டும்' என்று பிரார்த்தித்த தற்கு இணங்கச் சுவாமி இங்கு எழுந்தருளியுள்ளார் என்பது ஐதிகம். கேதார நாதர் ஏப்ரல் முதல் செப்டம்பர் முடிய மனிதர்களால் பூசிக்கப்படுகிருர். அக்டோபர் முதல் மார்ச்சு முடியப் பனியால் மூடப்பட்ட நிலையில் சிவபெருமானுக்குத் தேவ பூஜை நிகழுகிறது.

**(12) குசுமேசம் :**

ஆந்திரமாநிலத்தில் ஔரங்க பாத்தில் இறங்கி, இத்தலத்திற் குச் செல்ல வேண்டும். சுதர்மன் என்ற அந்தணின் மனைவியான குசுமையின் பெயரால் இறைவன் குசுமேசுவரன் எனப் பெயர் பெற்ருன். இங்குள்ள சிவலிங்கம் செந்நிறம் உள்ளதாகக் காட்சி அளிக்கிறது. அம்பிகை குங்குமப் பூவால் வழிபட்ட சிறப்புடையது (இதனுல் இத்தலம் குஸ்குணேசம் எனவும் வழங்கும். 'குங்குளம்' : குங்குமப்பூ) சுதர்மனின் இரண்டாவது மனைவியான குசுமையின் புத்திரன் கொலை செய்யப்பட்ட போது, அவள் பூசைக்கிரங்கி இறைவன் அவளுக்கு மகனை எழுப்பியருளிய சிறப்புடையது. பின்னே சொல்லப்பட்ட இரண்டு சோதிலிங்கத் தலங்களிலும் உள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடுதல், சகல பாவங்களையும் போக்கி மனத்திற்கு அமைதியை அளித்து வீட்டு உலகையும் நல்கும்.

இங்குள்ள இலிங்கங்களின் பெயர்களை நாடோறும் காலையில் நினைத்த மாத்திரத்தே பாபம் அகன்று,நினைத்த செயல் நிறைவேறும்என்பது ஆன்ருேர் துணிபு.



# வாழும் வழிகள்



ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்

மனிதன் வாழும் வழிவகைகளை நன்கு தெரிந்து கொள்ளவேண்டும். சிந்தனையும், தெய்வ வந்தனையும் மனிதனுடைய வாழ்வை உயர்த்துகின்றன.

நமக்கு எது மகிழ்ச்சியைத் தருகின்றதோ, அதனை நாம் மன வாக்குக் காயங்களால் பிறருக்குச் செய்ய வேண்டும். நமக்கு எது எது வெறுப்பைத் தருகின்றதோ அதனை நாம் மறந்தும் பிறருக்கு ஒரு போதும் செய்யக் கூடாது.

அடியில் கூறும் என் அநுபவ உரைகளை நன்கு படித்து அன்பர்கள் வாழவேண்டும். வாழும் வழிகளைச் சுருக்கமாக இதில் குறிப்பிட்டிருக்கின்றேன்.

பத்து அறக் கட்டளைகள்

(1) எப்போதும் எந்த இடத்திலும் பிறர் மனம் நோவப் பேசக்கூடாது.

(2) ஒருவரிடம் நேரில் பேசும் போது 'நீங்கள், உங்கள்' என்று பன்மையாகப் பேசிவிட்டு, அவர்கள் இல்லாதபோது 'இவன், அவன்' என்று ஒருமையில் பேசுவது மனிதனுடைய உயர்வைக் கெடுத்துவிடும்.

(3) பிறருடைய குற்றங்களை ஆராய்தல் கூடாது; நினைக்கவும் கூடாது; பேசவும் கூடாது. பிறருடைய குற்றங்களைப் பூதக் கண்ணாடி போட்டு ஆராய்ந்து, கண்ட கண்ட இடத்திலெல்லாம் அதே வேலையாகப் பேசுகின்றவர் பலர் உளர். இந்தப் பழக்கம் இவர்களுடைய வாழ்வைப் பாழ்படுத்திவிடும். பிறருடைய குண நலன்களை மட்டும் சமயம் வரும் போதெல்லாம் கூறுதல் வேண்டும். இது மனித வாழ்வை உயர்த்தும்.

(4) கடவுள் சந்நிதியில் நாம் வாழுகின்றோம். கடவுள் எங்கும் உறைபவர். அவர் நாம் நினைப்பதை, பேசுவதை, செய்வதை அறிந்துகொண்டே யிருக்கின்றார். ஆதலால் தீய சிந்தனை, தீய சொற்கள், தீய் நடைகள் இவைகளை அறவே விலக்கவேண்டும். நல்ல சிந்தனை, நல்ல இனிய உண்மை யுரைகள், நல்ல நடைகள் ஆகியவைகளை மேற்கொள்ள வேண்டும்.

(5) நமக்கு எல்லாம் தெரிந்துளது; மற்றவர்க்கு என்ன தெரியும்? என்று நினைத்துக்கொண்டு தருக்குற்றிருக்கக் கூடாது. கற்றது கைம்மண்ணளவு; கல்லாதது உலகளவு. எல்லாந் தெரிந்தவர்களும் ஏதுந் தெரியாதவர்களும் உலகில் இல்லை. ஆதலால் அடக்கமாகவும் பணிவாகவும் இருத்தல் வேண்டும். பணிவு மனிதனுடைய வாழ்வை உயர்த்தும்.

(6) கடன்பட்டு ஆடம்பரமாகச் செலவழிக்கக் கூடாது. கடன் படுவது மிகவும் துன்பத்தைத் தரும். கூடுமானவரை சிக்கனமாகவும் எளிமையாகவும் வாழ்ந்துவரல் வேண்டும். கடன் பட்டுப் பாலன்னம் உண்பதைப் பார்க்கினும், கடன் படாமல் உப்பில்லாக் கஞ்சி யுண்பது நல்லது.

(7) யாரிடத்திலும் கடுஞ் சொல்லாக வெடு வெடு என்று பேசக்கூடாது. இனிமையாகவும், குளிர்ச்சியாகவும் பேசவேண்டும். கரவாகவும் ஒருவரிடம் பழக்கக் கூடாது.

(8) தாய்மொழி யிடத்திலும், தாய் நாட்டிலும், தன் சமயத்திலும் பற்றிருக்க வேண்டும். ஆனால் பிற மொழிகளிடத்திலும் பிற சமயங்களிலும் வெறுப்புணர்ச்சி யிருக்கக்கூடாது. சமய வெறி, மொழிவெறி, ஜாதிவெறி யிருக்கக் கூடாது. மொழி வெறியும் இனவெறியும் மனிதனுடைய முன்னேற்றத்தைத் தடுத்துவிடும்.

(9) நாம் பிறவாத இடமோ, பேசாத மொழியோ, நாம் தோன்றாத குலமோ கிடையா. எண்ணில் கோடி பிறவிகளை எடுத்துள்ளோம். ஆதலால் எல்லாம் நம் நாடு எல்லோரும் நம் சகோதரர்கள் என்று கருதி சாந்தமாகவும் அன்பாகவும் வாழவேண்டும்.

(10) மரணம் எப்போது வரும்? எந்த இடத்தில் வரும்? எவராலும் அறிந்துகொள்ள இயலாது. அது எந்த விநாடியிலும் வரும்; ஆதலால் நல்ல அறங்களைச் செய்து தவம் தியானம் புரிந்து செல்கதிக்கு நலந்தேட வேண்டும்.



# ஸ்ரீ சங்கர ஜயந்தியின் மஹிமை

## ஸ்ரீ P. N. ராமமூர்த்தி தீக்ஷிதர்

நமது புண்யமான பாரத தேசம் பூராவும் மிக முக்யமாகக் கொண்டாட வேண்டியது ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவம் தான்.

இந்த உத்ஸவத்தைக் கொண்டாடுவதால்தான் மற்ற விநாயக சதுர்த்தி, ஸ்ரீ ராமநவமி, கோகுலாஷ்டமி முதலிய உத்ஸவங்களைக் கொண்டாடுவதற்கு முடியும் என்பதுதான் பாரத தேசவாஸிகள் தெரிந்துகொள்ள வேண்டியதாகும்.

ஏனெனில், ஸ்ரீ சங்கரர் அவதரிக்கும் முன்பு பல துர்மதங்களின் வலுவினால் நம் பண்டிகைகளைக் கொண்டாட முடியாமல் இருந்தது. ஸ்ரீசங்கரர் அவதரித்து துர்மதங்களைக் கண்டித்து, ஷண்மத ஸ்தாபனம் செய்து வேதமத தர்மத்தை ஆஸ்திகர்கள் அனுஷ்டானம் செய்யும்படி செய்த பெருமை ஸ்ரீ சங்கரரையே சார்ந்ததாகும்.

இந்த அரும் பெரும் உண்மையை நாம் நன்கு அறிந்து கொண்டால் ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவம் கொண்டாட வேண்டிய அவசியத்தை நன்கு புரிந்து கொள்ளும்படியாக ஆகும்.

ஸ்ரீ சங்கர விஜயத்தில் அனேக ஜன்மாவில் செய்து வந்த தபஸ்ஸின் பயனால்தான் ஸ்ரீ சங்கரர் சரித்திரத்தில் நம்பிக்கை உண்டாகி ஸ்ரீ சங்கர ஜயந்தி உத்ஸவம் நடத்த வேண்டும் என்றும் ஸாதுக்கள் முகமாக ஸ்ரீ சங்கரர் சரித்ரத்தை சிரவணமும் செய்ய வேண்டும் என்றும் தோன்றும் எனக் கூறி இருக்கிறது.

அத்துடன் ஜன்மாந்திரத்தில் செய்திருக்கும் புண்யத்தைக் கொண்டு சங்கர ஜயந்தி உத்ஸவம் நடத்தி சங்கர விஜயத்தை ஸாதுக்களின் முகமாக சிரவணம் செய்துதான் ஆக வேண்டுமா என்று கேட்பதும் நினைப்பவர்களுக்கும் சங்கர விஜயத்திலேயே பதில் இருக்கிறது. "பாரத பூமியில் ஜன்மாவை அடைந்த ஒவ்வொருவரும் தன் ஜன்மாவில் ஒரு தரமாவது உத்தமமான சங்கரர் சரித்திர சிரவணம் செய்து சங்கர ஜயந்தி உத்ஸவத்தை நடத்தினால் புண்யத்தைச் செய்தவர்களாக ஆவார்கள்" என்றும் கூறியுள்ளது.

மேலும் மற்ற உத்ஸவங்களை நடத்தினால் ஐச்வர்யம் முதலிய

லாபங்கள் கிடைக்கும் என்கிற நம்பிக்கை எல்லோருக்கும் இருக்கிறதே, இந்த ஸன்யாஸியைக் கொண்டாடுவதால் ஐச்வர்யம் முதலிய லாபங்கள் கிடைக்குமா என்று ஸந்தேஹிப்பவர்களுக்கும் சங்கர விஜயத்தில் பதில் இருக்கிறது.

த்வாதசியன்று ஸ்ரீ சங்கரர் ஒரு ஏழையான வேதவித்தின் க்ருஹத்திற்குச் சென்று பிக்ஷை கேட்டார். இந்த வீட்டுக்காரர் உஞ்சவ்ருத்தி செய்வதற்கு வெளியில் போயிருக்க, அவர் பத்னி ஸ்ரீ சங்கரர் முகத்தைப் பார்த்து, அந்த ப்ரம்ம தேஜஸ்ஸின் மஹிமையை நினைத்து, இந்த உத்தம குமாரனுக்கு த்வாதசியான அன்று பிக்ஷை போட க்ருஹத்தில் ஒன்றுமே இல்லாத நிலையில் தெய்வம் தன்னை வைத்துச் சோதிப்பதை நினைத்து மிகவும் வருந்தி, புருஷன் அக்ஷதை கொண்டு வந்து சமைத்தல்லவா இந்தக் குழந்தைக்கு பிக்ஷை போட முடியும், அதுவரை இக்குழந்தை வீட்டு வாசலில் நிற்க முடியாதே என்று வருந்தி, த்வாதசியன்று முக்யமாக உபயோகப்படுத்தும் வழக்கமான நெல்லிக்கனி ஒன்று அழுகலாக இருந்ததை கண்ணில் ஜலம் ததும்ப பிக்ஷாபாத்திரத்தில் கொண்டுவந்து போட்டாள்.

ஸ்ரீ சங்கரர் அன்று அந்த குடும்பத்திற்கு அஷ்டைச்வர்யத்தையும் அனுக்கிரஹிக்க ஸங்கல்பம் செய்து கொண்டு முதன் முதலில் பிக்ஷைக்கு அந்த வீட்டையே தேர்ந்து எடுத்திருக்கிறார்கள் என்றே நினைக்க வேண்டியதாக இருக்கிறது.

ஏழைமையால் உத்தமியான ஸுமங்கலி கண்ணீர் விடுவதை கருணாமூர்த்தியான பால சங்கரர் இந்த குடும்பத்திற்கு அஷ்ட லக்ஷ்மியை அனுக்ரகம் செய்ய வேண்டும் என்று மஹாலக்ஷ்மியைக் குறித்து கனகதாரா ஸ்தோத்திரத்தில் துதித்தார்கள்.

மஹாலக்ஷ்மி சங்கரரைப் பார்த்து, இந்த குடும்பம் ஏழைமையால் கஷ்டப்படும்படி பகவத் ஸங்கல்பம் என்று சொல்ல, அதற்கு ஸ்ரீ சங்கரர் த்வாதசியன்று ஒன்றும் இல்லை என்று சொல்லாமல் ஓர் அவிந்த நெல்லிக் கனியை எனக்கு பிக்ஷையாக அளித்த புண்யத்திற்கு எவ்வளவு அனுக்ரகிக்கலாமோ அவ்வளவு அனுக்ரகிக்க வேண்டும் என்று ப்ரார்த்தித்தார்கள்.

மஹாலக்ஷ்மி அந்த வீட்டின் பக்கத்தில் தங்க நெல்லிக் கனியாகச் சிறிது நேரம் வர்ஷித்து அனுக்ரகித்தாள். அவர்கள் ஏழைமை நீங்கி ஸகல ஸம்ருத்தியுடன் இல்லற வாழ்க்கை நடத்தினார்கள் என்னும் விவரமும் சங்கர விஜயத்தில் கூறியிருக்கிறது.

இது ஸமயம் நமது காமகோடி ஸ்ரீ பரமாசார்யாள் இது போல்

ஓர் அற்புதமான ஸம்பவம் நான் நேரில் காணும் போது நிகழ்த்தி யுள்ளார்கள்.

"எங்கள் ஊரில் ஸ்ரீ பெரியவாள் கிராமப் பிரதக்ஷிணம் செய்து வரும்போது ஒவ்வொரு க்ருஹத் திலும் தீர்த்தத்தை செம்பில் எடுத்து பூர்ண கும்பம் கொடுக் கும் போது பூர்ண கும்பத்தைத் தொட்டார்கள். ஓர் க்ருஹத்தில் பெரியவாள் மேனு தன் க்ரு ஹத்தை தாண்டிடுமோ என்று அவஸரத்தில் தீர்த்தமில்லாமல் பூர்ணகும்பத்தைக் காண்பித் தார். ஸ்ரீ பெரியவாள் அந்த க்ருஹத்தில் மட்டும் பூர்ணகும் பத்தை அவஸரமாக லாவி எடுத்துவிட்டார்கள். அந்த வீட்டுக்காரர் எல்லோருடைய க்ருஹத்திலும் பூர்ண கும்பத் தைத் தொட்டுவிட்டு நம்மாத் தில் கையில் எடுத்துவிட்டார் களே என்று ப்ரமித்துவிட்டார், அந்த க்ருஹத்துக்கு அன்று ஸ்ரீ ஆசார்யாள் அனுக்ரகம் செய்ய ஸங்கல்பித்து விட்டார்கள் என்றே நினைக்கவேண்டியிருக் கிறது. உடன் மேனுவில் உள்ள குங்குமத்தை அந்த வெள்ளி செம்பில் நிரப்பி அவர் கையில் கொடுத்தார்கள். அந்த குடும் பத்தில் அது ஸமயம் கொஞ்சம் சளைப்பு இருந்தது. அதற்கு பிறகு சில மாதத்தில் அந்த குடும்பத் திற்கு ப்ரமிக்கும்படி பெரிய அள வில் தனம் குவிந்துவிட்டது. பெரியவாளின் பெருமை இவ் வூரில் அதற்குப் பிறகு அதிக மாகக் கொண்டாடும்படி ஆகி விட்டது.

ஸ்ரீ ஆதிசங்கரர் குமரி முதல் ஹிமயம் வரை பாத யாத்திரை செய்து தர்மத்தை ரக்ஷிப்பதற்கு ஆங்காங்கு மடத்தை ஏற்படுத்தி இன்றும் உலகத்தார்கள் அவை களைப் பார்த்து ஸந்தோஷத்தை யும் க்ஷேமங்களையும் அடைந்து வருகிறார்கள்.

ஒவ்வொரு வருஷமும் வருஷ ஆரம்பத்தில் சங்கர ஜயந்தி வரும் படி சித்திரை மாதத்தில் ஸ்ரீ ஆதி சங்கரர் அவதரித்து 12 மாதமும் பக்தர்கள் மற்ற பண்டிகைகளை நிர்விக்னமாக நடக்கும்படியாக முதலில் சங்கர ஜயந்தி உத்ஸவத் தைக் கொண்டாடும்படி அமைந் துள்ளது.

சித்திரை மாதத்தில் தான் மத்வாசாரியரும் ராமானுஜரும் அவதாரம் செய்திருப்பதால், அந்த சித்திரை மாதத்தில் சங்கர ஜயந்தி உத்ஸவத்தை நடத்துவது ஸ்ரீமத்வாசார்யாள், ஸ்ரீராமானு ஜாசாரியாள் ஜயந்திகளையும் கொண்டாடிய புண்யமும் நமக் குக் கிடைத்துவிடுகிறது என்பதும் சங்கர ஜயந்தி நடத்துவதில் உள்ள மஹிமையாகும்.



# ஆலயம்

## மகாவித்துவான் ஆறுமுக நாவலர்

**"ஆலயம்" என்பதன் பொருள் யாது?**

"ஆலயம்" என்பதை ஆ+லயம் எனப் பிரிக்கலாம் "ஆ" என்பதற்கு ஆன்மா என்று பொருள், 'லயம்" என்பதற்கு லயிப்பதற்கு அல்லது சேருவதற்கு உரியது என்பது பொருள். ஆகவே, ஆலயம் என்பதற்கு "கடவுளது திருவடியில் ஆன்மா லயிப்பதற்கு உரிய இடம்" என்பது பொருள். ஆ என்பது ஆணவமலத்தையும், லயம் என்பது அடங்கியிருத்தலையும் குறிக்கின்றமையால், ஆலயம் என்பதற்கு ஆணவமலம் அடங்குவதற்குரிய இடம் என்றும் பொருள் கூறலாம். இதற்குக் கோயில் என்றும் ஒரு பெயர் உண்டு. அதனைக், கோ+இல் எனப்பிரித்து, கோ — கடவுள், இல்—தங்குமிடம், கடவுள் தங்குமிடம் எனப் பொருள் கூறுவர்.

**எங்கும் நிறைந்து விளங்கும் கடவுளுக்குக் கோயில் எதற்கு?**

பூமியினடியில் எங்கும் வியாபித்திருக்கும் தண்ணீரை நமக்கு உபயோகப்படுத்த வேண்டுமானல் ஒரு கிணறு வெட்டிக் கட்டவேண்டியிருக்கிறது. தண்ணீர் பூமியின் அடியில் எங்கும் நிறைந்திருந்தாலும் கிணற்றினுலேயே நமக்குத் தாகவிடாய் தீருகிறது. 'எலக்ட்ரான்' (மின்சாரம்) ஆகாயமெங்கும் வியாபித்திருந்தாலும் 'எலெக்ட்ரிஸிட்டி பவர் ஹவுஸ்' (மின்சார நிலையம்) மூலமாகவே நமக்கு அதனை அனுபவிக்க முடிகிறது. இவற்றைப்போல, கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆலயங்களில் விசேஷமாக நின்று அருள் செய்கின்றார். ஆகையால் அவர் அருள்பெற ஆலயம் இன்றியமையாததாகின்றது.

**இந்துமதக் கோயில்களின் சிறப்புக்கள் எவை?**

இந்துமத ஆலயங்கள் ஒவ்வொன்றும் முதநூல்களின் படியே இயற்றப்பட்டுத் தத்துவ

ஞானத்தை உண்டாக்குவதற்கு இன்றியமையாக் கருவிகளாய் விளங்குகின்றது.

கோபுரம், கொடிமரம், பிராகா ரங்கள், மண்டபங்கள் முதலியன சிறந்த தத்துவங்களை விளக்கும் படியே அமைக்கப்பட்டுள்ளன.

ஆலயங்களில் நடைபெறும் பஞ்சசுத்தி, பூஜை, நைவேத்தி யம், தீபாராதனை, உற்சவம் முத லியனவும் சிறந்த கருத்துக்களை வெளிக்காட்டுவனவாய் இருக்கின் றன.

கோபுரத்தின் தத்துவம் யாது?

கோபுரம் ஸ்தூல லிங்கத்தை உணர்த்துகின்றது. ஆலயங்கள் ஓர் யோகியின் சரீரத்தின் கண் அமைந்துள்ள தத்துவங்களை விளக்குகின்றன யோகி யின் பாதம் முதல் சரீ ரம் வரையுள்ள பாகங்களையும் அவனது இதயத்தில் இறைவன் விளக்கும் தன்மையையும்கோயில் கள் நன்ருகக் காட்டுகின்றன. ஆகவே, சரியை கிரியை உடைய வர்களை யோகிகளாக்க ஆலயங் கள் பயன்படுகின்றன என்னலாம். கோபுர தரிசனம் கடவுளது பாத தரிசனம் ஆகும். இதனை பிரம் மரந்திரமத்ய கபாலத்வாரம் என்று யோகிகள் கூறுகின்றனர்.

கொடிமரத்தின் தத்துவம் யாது?

கொடிமரம், யோகியானவன் பிராணவாயுவை நடுநாடியாகிய ஸுஷும்நையில் அசைவற்று நிறுத்திக்கொண்டு தியானிக்கில் மனம் முதலிய காரணங்கள் யாவும்நின்று பிரபஞ்சமே தோன் ருது சிவதரிசனம் உண்டாகும் என்னும் உண்மையை அறிவிக் கின்றது.

பிராகாரங்களின் தத்துவம் யாது?

கோயிலினுள்ளிருக்கும் ஐந்து பிராகாரங்கள் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ் ஞானமயம், ஆனந்தமயம் என் னும் ஐந்துவித கோசங்களையும் குறிக்கின்றன. மூன்று பிரா காரங்கள் ஐந்து கோசங்களினு லான ஸ்தூல சூட்சும காரணம் என்னும் மூவகைச் சரீரங்களை விளக்குகின்றன. வழிபடுவோர் மூன்று முறை ஐந்து முறை பிரா காரங்களைச் சுற்ற வேண்டுமென் பது, பஞ்ச கோசங்களையும் மூவ கைச் சரீரங்களையும் கடந்து இறைவன் விளங்குகின்ருன், என் பதை நினைப்பதற்காகும்.

கர்ப்பக் கிரகமாவது யாது?

கர்ப்பக்கிரகம் என்பது பிர தான மூர்த்தியை வைத்து வணங் கப்படும் இடம். இதற்கு மூலஸ் தானம் என்றும் பெயர் உண்டு. இதன் உண்மை எல்லா உலகங் களையும் படைத்தற்குக் காரண மான மூலப்பிரகிருதியின் இடம் என்பதாம். கடவுள் உலகைப் படைக்க நினைத்த காலத்து அவ ரது அருட்சக்தியை மாயை

யிடத்தே அதிட்டிக்கச் செய்கிருர் என்பது கருத்து. அருபியாகிய கடவுள் ரூபாரூபியாகிருர்.

மண்டபங்கள் எவை? அவை எவற்றை உணர்த்துகின்றன?

அர்த்த மண்டபம், மஹா மண்டபம், ஸ்நபந மண்டபம், அலங்கார மண்டபம், சபா மண்டபம் என்னும் மண்டபங்கள் நிவிருத்தி பிரதிஷ்டை, வித்தியை, சாந்தி, சாந்தியாதீதம் என்னும் கலைகளை உணர்த்துகின்றன.

மேற்கூறியவற்ருல் ஆலயங்கள் மிகவும் அவசியமானவை என்பதும், ஆலய பாகங்கள் பெரும் தத்துவங்களைக் கொண்டுள்ளன என்பதும் விளங்குகின்றன.



# மாங்காட்டில் தபஸ் காமாக்ஷி

## என். கே. கிருஷ்ணமூர்த்தி

"சிவத்தைப்பேண தவத்தை தேடு" என்ற மூதுரைக்கிணங்க அன்னை பார்வதிதேவி பூலோகம் வந்தனள். தவம் செய்யத் தகுதியுள்ள காடு இன்றியமையாததாகும். ஓர் மரத்தின் அடியிலிருந்து தவம் செய்வது என்பது வழக்கம். பத்ரி மரத்தின் அடியில் நாராயணன் தவம் செய்து "பத்ரீ நாராயணன்" எனப் பிரிசித்தி பெற்றிருப்பது போலவே, இத்தேவியும் மா மரக் காட்டில், ஓர் மரத்தினடியில் தவம் செய்யலாயினள். இக்காடு வடமொழியில் "ஆம்ராரண்யம் - சூதவனம்" என்றும், தமிழில் மாவை - மாங்காடு என்றும் அழைக்கப்படுகிறது. பரமேஸ்வரனை மறுபடியும் அடையவே ஜகன்மாதா இங்கு மிகக் கடுமையான தவத்தை மேற்கொண்டனள்.

ஐந்தணல் நடுவினில் ஒற்றை காலில் நின்று செய்தனள். இடது கால் கட்டைவிரல் தணலின் மீது ஊன்றி நின்ற வண்ணமும், வலது காலை மடக்கிக் கொண்டும் இடது கையை நாபி அளவில் சின் முத்திரையில் வைத்திருப்பதையும் வலது கையை தலைக்குமேல் தூக்கிக் கொண்டுக் கைவிரல்களில் ஜபமாலையை வைத்துக் கொண்டிருப்பதையும், அழகு பெற்றதுமான ஒரு பஞ்சலோக விக்கிரகத்தில் காணலாம். தலையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கும் ஜடாமுடியையும், இடுப்பில் மரவுரியையும் காணலாம்.

இந்த அழகிய திருவுருவைக் காணக் கண் அவசியம் புண்ணியம் செய்திருக்க வேண்டும். மாமரம் குளிர்ச்சி தருமாதலினால் அன்னை அதைத் தேர்ந்தெடுத்தனள் போலும். இத்தவத்தைக் கண்ட பரமன், காக்ஷிதர இங்கு வருகிறார். ஆனால், இறங்கின இடத்திலே கைகூப்பிய பிருகு ரிஷியைக் காண்கிறார். அந்த ரிஷியும் இங்கேயே ஒரு பக்கத்தில் தவம் செய்து வந்திருந்தனர். இவரது தவத்தை மெச்சி, இந் நிகழ்ச்சி நினைவுபெற வேண்டுமென ஈசன் தனக்கே "பார்க்கவேஸ்வரர்" "சுக்ரேஸ்வரர்" "வள்ளீஸ்வரர்" எனப்பெயர் பூண்டு, ரிஷியை திருப்தி படுத்துகின்றார். அங்குள்ள குளத்தை "சுக்ர தீர்த்தம்" என்றழைக்கின்றனர்.

இதன் பின்னர்தான் கடும் தவம் செய்யும் காமாக்ஷிக்கு தரிசனம் தருகிறார் பரமேஸ்வரன். பூஜைக்காக, அன்னை காஞ்சியில் உள்ள கம்பா நதி தீரத்திற்கு செல்லுகின்றனர். அங்கு மா மரத்தின் அடியில் மணலினால் லிங்கம் செய்து வழிபடுகின்றனர். அந்த லிங்கத்தையே "ஏகாம்பர நாதன்" என்பர்.

பின்னர் இவ்விருவரும் பார்வதி பரமேஸ்வரர்களாக ஐக்கிய மாகின்றனர்.

ஒரு சுவையான நிகழ்ச்சியை மாங்காட்டு ஆதி காமாக்ஷியை சம்பந்தப் படுத்திக் கூறுகின்றது ஓர் வரலாறு. ஸ்ரீ சுந்தரேஸ்வரர் கோவில் கொண்டுள்ள போரூரிலிருந்து வரும் இடையனொருவன் தினமும் மாங்காட்டில் மாடுகளை மேய்த்து வந்தனன். தினமும், ஓர் பசுவின் மடியிலிருந்து பால் பூராவும் கரந்திருப்பதைக் கண்டான்; இதைக்கண்டு பிடிக்கவும் முற்பட்டான். ஓர் சிறுபெண், இந்த பசுவினிடமிருந்து பாலைப் பெற்றுக்கொண்டு பருகுவதைக் கண்டு, அப்பெண்ணைத் தடுத்து நிறுத்தி யாரென வினவினான். அப்பெண் தானே பார்வதி தேவியென்றும் இங்கு தவத்திற்காக வந்திருப்பதாகவும் உரைத்தனள். மேலும் தன்னைப் பார்த்ததை யாருக்கும் தற்பொழுது தெரிவிக்கவேண்டாமென கேட்டுக் கொண்டாள். இடையன் கோவூர் சென்று இந்நிகழ்ச்சியை எல்லோருக்கும் மிகவும் அதிசயமாகத் தெரிவித்தனன். இதை நிச்சயம் செய்துகொள்ள பெரியோர்கள் விரும்பினர். அப்பொழுது அங்குள்ள ஒருவர் மீது ஆவேசம் வந்து, இது வரலாற்று உண்மையென்றும், கோயில் கட்டும் படியும் ஆணையிட்டார். மானியங்களும் அளிக்கப்பட்டன.

பின்னர், இடையன் சொன்ன சொல் தவறியதால் அம்பாளின் சாபத்துக்குள்ளாகி தற்பொழுது இங்கு இடையர்கள் வம்சம் வாழ்ந்து செழிப்பதில்லை எனவும் கூறப்படுகிறது!

அம்பாளின் உக்ர தபஸ்ஸின் வேகமும், அக்னியின் உஷ்ணமும், அக்கிராமத்தில் வசிக்கும் மக்களைப் பாதித்தது. க்ஷேத்ராடனத்துக்காக அங்கு வந்த ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாள், ஓர் அர்த்த மேருவையும் ஸ்ரீ சக்ரத்தையும், ஸ்தாபித்து அம்பாளின் உக்கிரத்தைத் தணியச் செய்ததாகவும் வரலாறு.

இதற்குப்பிறகுதான் அவர் காஞ்சிபுரம் சென்றதாகக் கூறுவர் அறிஞர். இன்றும் கோயிலுள் ஆதி சங்கரரின் சிலையுள்ளது. அர்த்த மேருவும் அதன் மீது ஸ்ரீ சக்ரமும் உள்ளது.

காஞ்சிபுர அரசர்கள் இந்தமாங்காட்டில் மண்டபம் முதலியன கட்டிவைத்தனர். நவாபு காலத்தில்கூட இங்கு எந்தவிதமான தொந்தரவுகளும் இல்லாமல்

இருந்ததோடல்லாமல், பல மான் யங்களும் கிடைத்துள்ளது. அவைகளை தற்போது "நவாபு மான்யம்" என்றும் சொல்கின்றனர்.

காஞ்சீபுரம் மாதிரியே இங்கும் காமாக்ஷியம்மனின் ஆலயம் ஊரின் நடுவினிலும், இதற்கு வடபுறத்தில் திருமால் ஸ்ரீ வைகுந்த நாதரெனும் திருநாமத்துடனும்' மற்றொருகோடியில் பரமேஸ்வன், பார்க்கவேஸ்வரர் என்ற பெயருடனும் திகழ்கின்றனர். சிவன் கோயிலில் பல சன்னதிகள் இருக்கின்றன. அவைகளுள் மிகவும் அதிசயமானது மாம்பழத்தை துதிக்கையில் கொண்டிருக்கும் கணபதியின் அழகு விக்கிரகம் ஒன்று. இதை அவசியம் காண வேண்டும்.

காமாக்ஷி அம்மன் கோவிலினுள் இருக்கும் அர்த்தமேரு மிகப் பெரியதாகும். ஓர் பதினெட்டு முழ புடவைகொண்டு அலங்காரம் செய்யப்படுகிறது. மேருவுக்குப்பின் மாங்காடு காமாக்ஷியின் திருவுருவம் உள்ள விக்ரஹமாக வலது கையில் கிளியுடன் காட்சியளிக்கின்றது. வெளிப்பிரகாரத்தில்தான் பஞ்சலோக தபஸ் காமாக்ஷியின் திருவுருவம் உள்ளது. கோயிலின் முன் மண்டபத்தில் ஓர் இடத்தில் ராஜ ராஜேஸ்வரியின் விக்கிரஹம் அதன் இரு பக்கங்களிலும் சரஸ்வதி - லக்ஷ்மிதேவிகள் சாமரம் போடும் காட்சியுடன் காணப்படுகிறது.

கோயிலின் அர்ச்சகர் மிகவும் வைதீக முறையில் பூஜைகள் செய்து வருகிறார். எல்லாதெய்வங்களுக்கும் ஆதிதெய்வம் இதுதான். இந்தக்கோயில் பிரசித்தி அடையாததற்குப் பல காரணங்கள் உண்டு. மேலும் இந்த இடம் மிகவும் சக்தி வாய்ந்த இடம். மரத்தின் வேர் பூமிக்கு அடியில் கண்களுக்குத் தெரியாமல் மறைந்திருப்பதினால்தான், அம்மரத்தின் கிளைகள் செழித்து பூக்கள் உண்டாகி பழங்கள் கிடைக்கின்றன. அதே மரத்தின் வேர் வெளியில் வந்துவிட்டால், மரத்தில் கிளைகள் சீக்கிரம் விழுந்து மரமே பயனற்றதாகிற தல்லவா? அஃதேபோன்று இந்த ஆதி காமாட்சி அம்மனும் எல்லா தெய்வங்களுக்கும் வேர் போன்று மாங்காட்டில் காட்சியளிக்கிறாள். இந்தக்கோயில் மிகவும் பிரஸித்தி அடைந்து விட்டால் ஆங்காங்குள்ள மற்றைய எல்லா கோயில்களின் மஹிமையும் குறைந்து விடுமோ என்ற காரணத்தினால் தானோ என்னவோ இந்தக் கோயில் அதிகம் பிரஸித்தி அடையாமல் இருக்கிறதோ என்றும் எண்ண வேண்டியிருக்கிறது.

இத்திருத்தலம் சென்னையிலிருந்து சுமார் பத்து மைல் தூரத்தில் உள்ளது. பஸ்கள் செல்லுகின்றன, பூந்தமல்லியிலிருந்து சுமார் மூன்று மைல் உள்ளது.



# ஈசன் நாமபஜனமே உலகத்தை உய்விக்கும்

ஸ்ரீ A. கோபாலய்யர்

எல்லா ஆன்மாக்களும் இன்பத்தையே விரும்புகின்றன. துன்பத்தை விரும்புவதில்லை. ஆனால் அந்தந்த ஆன்மாவின் கர்ம வினைக்குத் தகுந்தபடி இன்பமும், துன்பமும் மாறி மாறி வருகின்றன.

ஜீவன் முக்தி நிலையை எய்தியவர்கள் மட்டில் இன்ப துன்பத்தைச் சமமாகப் பாவித்து, எக்காலத்திலும் பிரம்ம ஞானத்திலேயே லயித்திருந்து பிரம்ம சாக்ஷாத்கார நிலையை அடைந்து பேரானந்த முறுகிறார்கள்.

தற்காலம் பிரம்ம ஞானிகள் அபூர்வமாக இருந்து வருகிறார்கள். அவர்களால்தான் லோக க்ஷேமம் காப்பாற்றப்பட்டு வருகிறது.

இப்போதைய நிலை என்ன? ஆன்மாக்கள் சத்தியநெறியைக் கடைப்பிடித்து வரவில்லை. அதனால் நாம் இன்றுகாண்பதென்ன? அடிக்கடி பூகம்பங்கள் ஏற்பட்டு உயிர்களைக் கொள்ளை கொண்டு விடுகின்றன. ரயில், கார், விமான விபத்துக்களும் இங்குமங்குமாக தினசரி நிகழ்ந்து வருவதைப்பார்த்து வருகின்றோம். சில தேசங்களில் யுத்தத்தினால் ஜீவன்களும், சொத்துக்களும் நாசமடைந்து வருகின்றன. வேண்டாதபோது நதிகளில் பிரவாஹம் வந்து உயிர்களையும், பயிர் விளையும் பூமிகளையும் நாசமாக்கி வருகின்றது. தேவைப்படும் போது ஜலம் இல்லாமல் பெரும் கஷ்டம்.

நம் தேசத்தில் நம் மாகாணத்தில் ஏரிகள், குளங்கள், கிணறுகளில் ஜலம் வற்றியும், நீர்த்தேக்கங்களில் ஜலமின்றியும் இருந்து வரும் நிலையில், ஜனங்களுக்கும், உயிர்ப்பிராணிகளுக்கும் ஆபத்து நேரிட்டுவிடுமோ என்ற ஆழ்ந்த கவலையில் இருந்து வருகிறோம். இன்னும் எவ்வளவோ வகையான கஷ்டங்கள். இவைகளினால் நாம் சுபிக்ஷமாக வாழ முடியவில்லை.

இதற்கான மூலகாரணத்தை ஒவ்வொருவரும் ஆராய வேண்

டியது அவசியமல்லவா? கடவுள் என்பவர் ஒருவர் இருக்கிறார். அவர் தான் ஸகல உலகங்களையும் உண்டாக்குபவர்; ரக்ஷிப்பவர்; அழிப்பவர். நமக்கு எல்லா நன்மைகளையும் அளித்துவரும் அவரைத் தினந்தோறும் நினைத்துப் போற்றிவர வேண்டாமா? அவர் நமக்கு வகுத்துள்ள நற்பண்புகளை கடைப்பிடிக்க வேண்டாமா? இதை மறந்து விட்டோம். இந்த மறதியே துன்பங்களுக்குக் காரணம்.

துன்பங்களை அணுகவொட்டாமல் செய்ய ஒரு மிக்க சுலபமான வழி இருக்கிறது. அதுதான் கடவுள் நாமத்தை ஓய்வு கிடைக்கும் நேரத்திலெல்லாம் ஸ்மரித்து வருவது. ஆலயங்களுக்குச் சென்று அவரை வணங்கிவருவது. ஒவ்வொருவரும் இதைச் செய்து வந்தால், குடும்ப வாழ்க்கை தேக வாழ்க்கை உலக வாழ்க்கை எல்லாம் இன்புற்றிருக்கும் என்பதில் சந்தேகம் ஏன்?



# ஸ்ரீ அகிலாண்டேஸ்வரிக்கு ஆசார்யாள் அணிவித்த தாடங்கம்

மதுரமித்திரன், என். சுப்பிரமணியம்

பல நூற்றுண்டுகட்கு முன்பாக பக்திமார்க்கத்தைச் சரியாக உணராத பாமரர்களின் ஆராதனையால் திருவானைக்காவலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அகிலாண்டநாயகியின் அருட்சக்தி கொடூரமானதாகக் கொழுந்து விட்டெரிய ஆரம்பித்தது. அம்பாளின் சன்னதி, யாரும் நெருங்க முடியாத வெப்பம் நிறைந்ததாக இருந்தது. கண்ணுக்கெட்டிய தூரம் வரை யாரும் அந்தப் பக்கமே செல்ல இயலாத நிலைமை ஏற்பட்டது.

ஆதி சங்கரபகவத் பாதாள் தேசமெங்கும் யாத்திரை செய்து வருகையில் திருவானைக்காவுக்கும் விஜயம் செய்தார்கள். தமது திருவானைக்கா விஜயத்தின்போது அவர்கள் இதை அறியநேர்ந்தது. மக்களின் துன்பம் துடைக்கத் திருவுள்ளம் கொண்டார்கள். கணபதி சக்கரத்தை முன்பு அமைத்து, அதன் வழி அம்பாளின் சந்நதியில் நின்று உக்ரத்தை ஒருவழிப்படுத்தி அதை இரு சக்கரங்களில் அமைத்து அம்பிகையின் உக்ரத்தைத் தணித்தார்கள். அந்த இரு சக்கரங்களையும் அகிலாண்ட நாயகியின் இரு காதுகளிலும் பொருத்தப்படத் தக்க தாடங்கமாகப் பிரதிஷ்டை செய்தார்கள்.

திருவானைக்கா பஞ்சபூதத் தலங்களில் ஒன்று. மிகப் பிரசித்தியும் கீர்த்தியும் வாய்ந்த தலம். விபூதிப்பிரகாரம் போன்ற பெரிய மதில்களும், வானளாவிய கோபுரங்களும் ஆயிரக்கால் மண்டபம் முதலான பெரிய மண்டபங்களும் கொண்ட பெரிய ஆலயம். இங்கு அம்பிகை அகிலாண்டேஸ்வரியின் காதுகளில் அத்தாடங்கம் இன்றும் ஒளிவிட்டு பிரகாசித்துக் கொண்டிருப்பதைக் காணலாம். அம்பிகையைத் தரிசிக்கச் செல்வோர், அகிலாண்ட நாயகிக்குத் "தாடங்கம்" சாத்தியிருக்கும் நேரத்தையே விசேடமாகக் கருதுவர்.

பின்பு ஒருகாலத்தில் இத் தாடங்கத்திற்கு ஏதேனும் பழுது

ஏற்பட்டால், தனது வழிவழி யாகத் தோன்றி பீடத்தை அலங் கரிக்கும் மடாதிபதிகளே அதைச் செப்பனிட்டு அம்பாளுக்குச் சாத்தவேண்டும் என்ற கட்டளை யையும் ஆதிசங்கர பகவத் பாதாள் அக்காலத்திலேயே பிறப்பித்துமிருந்தார்கள்.

சென்ற 40 ஆண்டுகளுக்கு முன்பு இத்தாடங்கத்தைப் புதுப் பித்து அம்பிகைக்குச் சாத்த வேண்டிய ஒரு நிலைமை ஏற்பட் டது. ஆதிசங்கரரின் வழித் தோன்றலாக தற்போது விளங்கி அருள்பாலித்து வரும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஆசார்ய சுவாமிகள் மிகச் சிறப்பானமுறை யில் இத்தாடங்கப் பிரதிஷ்டை யைச் செய்தார்கள்.

பல்வேறிடங்களிலிருந்தும் பக் தர்கள் குழாம் திருவானைக்கா வுக்கு விஜயம் செய்தார்கள். அம்பிகையின் தாடங்கப் பிரதிஷ் டையைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றார்கள். பல கோடிப் பிறவி களில் பெற்ற புண்ணியத்தின் பயன் என்று பக்தர்கள் புளகாங் கிதமானார்கள்.



---

## நல்ல செய்தி

ஸ்ரீ ஸ்ரீவத்ஸ எஸ். ஜெயராம சர்மாவுக்கு ஸ்ரீரங்கம் பெரிய ஆச்ரமம் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமி “பிரவசன துரீண” என்று பட்டம் சூட்டி கௌரவித்தார்கள். மேற்கு மாம்பலம் ஸ்ரீராம சமாஜ் ஆதரவில் அயோத்யா அசுவமேத மகாமண்டபத்தில் ஸ்ரீ ஜெயராம சர்மா நிகழ்த்தி வந்த ஸ்ரீ நாரணீயம் பிரவசனம் முடிவடைந்ததை ஒட்டி நடந்த விழாவில் ஸ்ரீமத் ஆண்டவன் ஸ்வாமியின் நியமனம் பெற்ற ஸ்ரீ ஆர். கோபாலசாமி ஐயங்கார் சமஸ்கிருதப் பாராட்டு உரையைப் படித்து “பிரவசனதுரீண” பட்டத்தைச் சூட்டினார்.

* * * *

பழநிமலையில் உள்ள முருகன் கோவிலுக்குச் செல்லு வதற்காக மலைமீது மற்றொரு விஞ்ச் (கம்பி ரயில்) அமைக்க தேவஸ்தானத்தினர் திட்டமிட்டுள்ளனர். இந்த விஞ்ச் விரைவில் பொருத்தப்படும்.

ஏற்கனவே மலைமீது செல்வதற்கு ஒரு விஞ்ச் இயங்கி வருகிறது. ஆனால் யாத்ரீகர்களின் கூட்டம் அதிகமாவதால் ரூ. 6 லெட்சம் செலவில் மற்றொரு விஞ்ச் அமைக்கப் படுவதாக ஆலய அதிகாரி ஒருவர் தெரிவித்தார்.

# நமது வாழ்க்கைக்கு தர்மஸூத்ரங்கள்

சிரோமணி இரா. பட்டாபிராம சர்மா

நமது அனாதியான இந்து மதத்திற்கு ஆணிவேர் போன்றது வேதம். அது நாலு வகைப்படும். அவைகளின் மூலத்தைக் கொண்டு ஸ்ம்ருதிகள், தர்ம சூத்ரங்கள் முதலியவைகளைச் செய்தனர் மஹரிஷிகள். அதில் தர்ம ஸூத்ரங்களிலிருந்து நமதுவாழ்க்கைக்கு தினசரி அனுஷ்டிக்க வேண்டிய சில பகுதிகள்.

நாம் தினமும் மெய்யாகவும், ப்ரியமாகவும் பேசப் பழக வேண்டும்.

விடியற் காலத்தில் படுக்கையை விட்டு எழுந்திருந்து, சாந்தமான மனத்துடன், பகவானை பலவித ஸ்துதிகளால் ஸ்துதி செய்ய வேண்டும்.

பாதங்கள் (கால்களை) வெண்கலப் பாத்திரம் கொண்டு அலம்பக் கூடாது.

பிறர் அணிந்து கொண்ட வஸ்த்ரம், பாதரக்ஷை இவைகளை அணிந்து கொள்ளக்கூடாது.

அக்னியில் பாதங்களை காய்ச்சக் கூடாது.

தேவதை, அந்தணர், பசு இவர்களை தாண்டிச் செல்லக்கூடாது.

பசு — அந்தணர், அக்னி — அந்தணர், கணவன் - மனைவி, குரு — சிஷ்யன், சுவாமி — நந்தி, தேவதை — பலி பீடம், இவர்களுக்கு நடுவில் செல்லக்கூடாது.

தும்பினால் "சதஞ்ஜீவ" என்று சொல்ல வேண்டும்.

வேதம், குரு, தேவதை, அந்தணர் இவர்களை ஒரு பொழுதும் நிந்தனை செய்யக் கூடாது.

ஹோமத்தின் வாசனை, பசுக்களின் தூளிகள், வேதங்களின் சப்தங்கள் இவைகளை பால் கறக்கும் நேரமாவது (கேட்டால்) அறிந்தால் எல்லா பாபங்களும் விலகும்.

நெருப்பையும், ஜலத்தையும், சேர்த்து எடுத்துச் செல்லக் கூடாது.

பாதத்தினால் ஜலத்தை உதைக்கக்கூடாது.

வீட்டில் கிணற்று நீரில் ஸ்நானம் செய்ய நேர்ந்தால், அந்நீரை

காயத்ரி மந்திரத்தால் அபிமந்த ரணம் செய்து ஸ்நாநம் செய்ய வேண்டும்.

ஸந்தியா வந்தனமில்லாமல் எந்த கர்மா செய்தாலும் அது பிரயோஜனமற்றதாகிறது.

ஸந்த்யை செய்யாமலிருந்தால் அவன் நித்யம் அசுத்தனுகிருன்.

அந்தந்த சாகைக்ளில் சொல் லியபடி அவர்கள் ஸந்தியா வந்த னம் செய்யவேண்டும்.

குனிந்துகொண்டும், நின்று கொண்டும், கீழ் வஸ்த்ரம் மட்டும் தரித்துக் கொண்டும், ஆசமனம் செய்யக்கூடாது.

நுனி உள்ளதாகவும், கரை யுள்ளதாகவும், கீழ் மேல், என இரு வஸ்த்ரங்களாக, ஸ்நாநம் தானம், ஜபம், ஹோமம், தேவ பூஜை போஜனம், ஆகிய சமயங் களில் தரிக்க வேண்டும்.

சிகை, யக்ஞோபவீதமில்லாமல் எந்தக் கர்மாக்கள் செய்தாலும் அது ப்ரயோஜனமற்றதாகும்.

ஒரு வஸ்த்ரம் தரித்துக் கொண்டு ஜலத்தில் இறங்கக் கூடாது.

இடது கையால் ஆசமனம் செய்யக் கூடாது,

ஸூர்ய உதயம் ஆகிய பிறகு தந்த தாவனம் செய்யக் கூடாது.

கிழக்கு முகமாக பல் தேய்த் தால், சரீராரோக்யம், தைர்யம் இவைகளை அடைகிருன்.

நடுவிரலால் தந்த தாவனம் செய்யவேண்டும்.

யக்ஞோபவீதத்தில் தாயத்து சாவி முதலியவைகளை போட்டுக் கொள்ளக் கூடாது;

ஸ்நாநம் செய்யும்பொழுது ஒரு வருடனும் பேசக்கூடாது.

யக்ஞோபவீதத்தை சரீர அள வுக்கு ஏற்றபடி செய்துகொள்ள வேண்டும். குட்டையாயிருக்கக் கூடாது. நீண்டதாகவும் இருக் கக்கூடாது.

பத்துத் தடவை (காயத்ரியை) ஜபிப்பதால் அப்போது ஏற்பட்ட பாபம் விலகுகிறது. நூறு தடவை ஜபிப்பதால் ஒரு நாள் செய்த பாபத்தையும், ஆயிரம் தடவை ஜபிப்பதால் ஒரு வரு ஷத்தில் செய்த பாபத்தையும் காயத்ரி நசிக்கச் செய்கிறது.

நித்யம் ப்ரும்ம யக்ஞம் செய்ய வேண்டும்.

தினந்தோறும் தாய், தந்தை, குரு, பெரியோர்கள் அவர்களுக்கு நமஸ்காரம் செய்ய வேண்டும்.

யாகசாலை, ஸபை, தேவாலயம் அல்லது தேவ ஸந்நிதி இவை களில் தனியாக வேறு ஒருவரை நமஸ்கரிக்கக் கூடாது.

தேவ ஸந்நிதி முதலியவை களில் நமஸ்காரம் செய்தால் பாபத்தை அடைவான்.

இந்த மாதிரி மேலும் தினசரி செய்யவேண்டியவைகளை ஸாதுக் களிடமிருந்து கேட்டு அறிந்து செய்து வரவேண்டும். ஸாதுக் களிடமிருந்து தர்ம சூத்திரங்களி லுள்ள பல விஷயங்களை கேட்டு அறிந்து செய்து வந்தால் ஸுலப மாக புருஷார்த்தங்களை அடைய லாம்.

# பிறந்த நாள் விழா

## ஸ்ரீ. வீ பலராமைய்யா

ஸ்ரீ ராம நவமி, கிருஷ்ண ஜெயந்தி, சங்கர ஜெயந்தி, மகாத்மா காந்தி ஜெயந்தி முதலிய விழாக்கள் கொண்டாடுவது பரவலாக இருந்து வருவது நாம் அறிந்ததே.

ஏன் இந்த விழா கொண்டாடுகிறார்கள்? இவர்களை நினைவு ஊட்டிக் கொள்வதற்கே! ஏன் அவர்களை நினைவு படுத்திக் கொள்ள வேண்டும்? அவர்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்த சத்தியம், அஹிம்சை முதலிய பேரொழுக்கங்களை நினைவு படுத்திக் கொண்டு நாமும் முடிந்த அளவுக்கு அக் கொள்கைகளைப் பின் பற்றுவதற்கே.

ராமன், கிருஷ்ணன் முதலிய அவதார புருஷர்கள் தோன்றி மறைந்து யுகங்களாகிவிட்டன. ஆனால் நாம் இன்றும் என்றும் அவர்கள் சாதனைகளை மேடைகளில் பேசிவருகிறோம்.

நாஸ்திகர்கள் கூட அவர்களுடைய வாழ்க்கையில் ஏதோ ஒரு பகுதியை உபமானமாக எடுத்துப் பேசுகிறார்கள்.

ஆனால் இக் காலத்தில் பலர் அர்த்தமற்ற வகையில் பிறந்த நாள் விழாக்கள் கொண்டாடுவதை நோக்க மிக மிக வேதனையைத் தருகிறது. பிறந்த நாள் விழாக்களின் கருத்தையே புறக்கணித்து குழி தோண்டி புதைக்கும் அளவுக்கு இக் காலத்தில் விழாக்கள் கொண்டாடும் பழக்கம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது.

அதனால் பிறந்தவன் அடையும் பலன் சூன்யம். விழாக்கள் கொண்டாடும் சமயவாதிகள் தற்காலிகமாக சில பயன்கள் பெறுகிறார்கள். இதெல்லாம் முடிவில் கபட நாடகமாகவே முடியும்.

நம் வள்ளலார் பிறந்து இற்றைக்கு 149 வருடங்களாகின்றன. இவருடைய பிறந்தநாள் விழா தமிழ் நாடெங்கும்

கொண்டாடப் பட்டது. அது மாத்திரமா!

மலேசியா, பீஜி, பம்பாய், டெல்லி முதலிய இடங்களிலும் வள்ளலார் பிறந்த நாள் விழா கொண்டாடுகிருர்கள்.

இவ் விழாவினுல் நாம் அடையும் பயன் யாது?

வள்ளலார் கொள்கைகளை நினைவூட்டிக் கொண்டு நாமும் அவருடைய அடிகளைத் தொழுது அவர் பெற்ற அருளைப் போன்று நாமும் ஆண்டவன் அருள் பெற்று நித்திய சீவர்களாய் வாழவேண்டிய நிமித்தமே அவர் பிறந்த நாள் விழா எங்கும் கொண்டாடுகிருேம்.

அருள் பெற்ருல் இருள் நீங்கும். அந்த அருளை எப்படிப் பெறுவது என்பதைப் பற்றி வள்ளலார் பல அருட்பாக்களில் குறிப்பிட்டுள்ளார்.

சத்தியம், அஹிம்சை என்னும் சீவகாருண்யம், ஸைகப்பற்றி ஆன்மநேய ஒருமைப் பாட்டை அடைந்தவர் வள்ளலார்.

நாமும் அவர் வழியை முடிந்த அளவுக்கு பின் பற்ற முயலுவோமாக.



---

## நல்ல செய்தி

நுங்கம்பாக்கம் உபநிஷத் ஆசிரமத்தில், வைதீக சமாஜத்தின் ஆதரவில் பிரதி ஞாயிறு தோறும் காலை 6-00 மணிமுதல் 7-30 மணிவரை சூரிய நமஸ்காரம் நடைபெற்று வருகிறது. இதில் சேர்ந்து சூரிய நமஸ்காரம் செய்ய விரும்பும் அன்பர்கள் வைதிக சமாஜத்தாரிடம் (4, வைத்திய நாதய்யர் தெரு, நுங்கம்பாக்கம்) அறிந்து கொள்ளலாம்.

* * * *

புகழ்பெற்ற புண்ணிய ஸ்தலமான மதுராந்தகம் ஸ்ரீ கோதண்ட ராமஸ்வாமி என்று அழைக்கப்படும் ஸ்ரீ ஏரி காத்த ராமருக்கு ஸ்ரீராமநவமி உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. மதுராந்தகத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கோதண்டராமஸ்வாமிக்கு வருடத்தில் இரண்டு நாட்கள் தான் விசேஷமாக உற்சவம் நடைபெறும். ஒன்று இந்த ராமநவமி. இரண்டு ஸ்ரீ கருணுகரர் சுவாமிக்கு நடைபெறும் பிரம்மோற்சவத்தில் ஆருவது நாள் உற்சவமாகும்.

# கோயிலுக்குச் செல்லும் முறை

சிவாலயத்துக்குச் சென்று ஆண்டவனை வழிபட்டு அவனருளைப் பெறவிரும்பும் மெய்யன்பர்கள் காலையில் எழுந்து நீராடி, தோய்த் துலர்ந்த ஆடைகளை அணிந்து கொண்டு நெற்றியிலும் உடலிலும் விதிப்படி திருநீறும் உருத் திராக்கமும் அணிந்துகொண்டு சாந்தமான மனத்துடன் செல்ல வேண்டும். கோயிலுக்குச் செல்லும் முன்னர் தாம் இல்லத்தில் செய்யவேண்டிய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய்து முடித்துக் கொள்ளவேண்டும்.

வழிபாட்டு முறை :

முதலில் கோயில் கோபுரத்தைக் கண்ட உடனே அதனைத் தூலலிங்கமாக வழிபட்டுப் பின்னர் கோயிலுக்குள் செல்ல வேண்டும். துவஜஸ்தம்பம் எனப்படும் கொடிமரத்தின் அருகில் நிலத்தில் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யவேண்டும்.

பின்னர் எழுந்து மாணிக்க வாசக சுவாமிகள் அருளிச் செய்த சிவபுராணம் என்ற திருவாசகப் பகுதியை ஓதிக்கொண்டே ஆலயத்தை ஒருமுறை வலம் வர வேண்டும். கொடி மரத்துக்கு முன்னுள்ள பலிபீடம், நந்திதேவரிடம் நின்று வணங்கித் தோத்திரஞ் செய்து அவர் அனுமதியுடன் உள்ளே செல்லவேண்டும். பிறகு ஆலய விநாயகப் பெருமானை வணங்கித் தோத்திரம் செய்தல் வேண்டும். விநாயகர் சந்நிதியில் மட்டும்தான் அன்பர்கள் சிரத்தில் இரண்டு கைகளாலும் குட்டிக் கொண்டு இரு கைகளையும் பிடித்துக்கொண்டு மூன்று முறை தோப்புக்கரணம் போட வேண்டும். மற்றைய மூர்த்திகளின் சந்நிதியில் இவ்விதமான வணக்கம் செய்தல் கூடாது.

அதன்பின் ஆலயத்தின் மூலஸ்தான மூர்த்தியின் முன் நின்று இரு கைகளாலும் வணங்கிப் பன்னிரு திருமுறைப் பாடல்களை ஓதுதல் வேண்டும்! இயலாதவர்கள் குறிப்பாக பஞ்சபுராணம் என்று வகுக்கப் பட்டுள்ளவற்றையாவது ஓதி வணங்கவேண்டும். பின்னர் அம்பாள் சந்நிதியில் நின்று தேவிக்குரிய பாடல்களைப் பாடி வணங்க வேண்டும். அப்படியே உற்சவ மூர்த்திகளையும் வழிபட்டு ஆலயத்தை இரண்டாம் முறையாக வலம் வரவேண்டும். வரும் போது நடராஜப் பெருமான், சிவகாமசுந்தரி ஆகிய சந்நிதிகளில் உரிய துதிகளால் வணங்கிப் பிறகு பிராகாரத்துள்ள சமயா சாரிய மூர்த்திகள் நால்வர், அறுபத்து

மூவர், சேக்கிழார் பெருமான் ஆகிய மூர்த்திகளையும் வழிபட்டுப் பின்னர் முருகப் பெருமானின் சந்நிதியையடையவேண்டும். உலகுய்யத்தோன்றிய ஒரு திருக்குமரனை உள்ள முருகப் பாடித் துதித்து அவன் திருவருள் பெற்று இரண்டாம் முறை வலத்தை முடித்துக் கொள்ள வேண்டும்.

மூன்றும் முறையில் வலம் வரும்போது தக்ஷிணாமூர்த்தி சந்நிதியின் முன் நின்று பாடலோதி வணங்கி அமர்ந்து திமூவைந்தெழுத்தை (ஜப உபதேசம் பெற்றவர்கள்) ஜபம் செய்யவேண்டும். பின்னர் துர்க்கை சந்நிதி வணக்கத்தையும் முடித்துக் கொண்டு கடைசியாகச் சண்டேச்வரரையடைய வேண்டும். சிவத்தியானபரராய் இருக்கும் அவரை மெல்லக் கைதட்டி எழுப்பி அவர்க்குரிய துதிப்பாடலை ஓதி "பெருமானே, அடியேன் இன்று இவ்வாலயத்துக்கு வந்து பெரியோர்கள் விதித்த முறைப்படி சிவ தரிசனத்தைச் செய்து முடித்துக்கொண்டேன். இதற்கு உரிய பலனைத் தேவரீர் அடியேற்கு அருளிச்செய்யவேண்டும்அடியேன் அபுத்தி பூர்வமாக ஏதேனும் தவறிழைத்திருப்பின் அவற்றைப் பொறுத்தருள வேண்டும்" என்று பிரார்த்தனை செய்துகொள்ள வேண்டும். சண்டேச்வரர் சிவ நிர்மால்யங்களைப் பெறும் அதிகாரம் உடையவராகையால் நிர்மால்யங்களை அங்கு விட்டுவிட வேண்டும். அவர் மீது நூல் போடுவதும் கையிலுள்ள விபூதி குங்குமங்களை யெறிவதும் பெரும் அபசாரம் ஆகும். அவர் எழுந்தருளியிருக்கும்மண்டபத்தை ஒரு போதும் வலம் வரக்கூடாது.

கடைசியாகக் கொடி மரத்தருகில் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்யவேண்டும். எழுந்து அதன் அருகில் உட்கார்ந்து சிவ நாம ஜபம் செய்யலாம். கொடி மரத்தின் முன்னர்த் தவிர வேறு எந்த மூர்த்திகளின் சந்நிதியிலும் எட்டுறுப்பு நிலந்தோயப் பூமியில் விழுந்து வணங்குதல்கூடாது. இது பெரியோர்களால் விதிக்கப்பட்டுள்ள தொன்று தொட்டுள்ள முறை.

பின்னர் சற்று நேரம் மௌனமாக அமர்ந்து கண்களை மூடிக் கொண்டு ஆலயத்துள்ளே தரிசித்த மூர்த்திகளை அகக்கண் முன் கொண்டுவந்து நிறுத்தித் தரிசிக்க முயற்சி செய்தல் வேண்டும். சிவத்தியானமாகவே சிவநாம உச்சாடனத்துடன் இல்லம் திரும்ப வேண்டும்.

திரும்பும்போது ஆலயத்தின் வாயிலில் சற்று உட்கார்ந்து பின் எழுந்து செல்ல வேண்டும். ஏன்? சிவாலயங்களில் ஏழு சிரஞ்சீவிகள் தங்கியிருந்து சிவதரிசனஞ் செய்பவர்களை அவர்கள் வீடு வரைப் பின் தொடர்ந்து வந்து மரியாதை செய்கிறார்களாம். அதற்காக அவர்களை வணங்கி "நீங்கள் இருங்கள், நாங்கள் சென்று வருகிறோம்" என்பது தத்துவம்.

# ஹிந்து ஆலயங்கள் பாதுகாப்பு கமிட்டி

## நிறைவேறிய தீர்மானங்கள் விவரம்

ஹிந்து தேவாலய பாதுகாப்பு மாநிலக் குழுவின் செயற்குழு கூட்டம் 23—4—72 தேதி மதுரையில் திரு. டி. எல். சசிவர்ணத் தேவர் தலைமையில் நடந்தது. 22 பேர் பங்கெடுத்துக் கொண்டனர். பல தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

மதுரை ஸ்ரீ மீனாட்சியம்மன் ஆலயத்திற்குள் "ஒலி — ஒளி" அமைப்பை வைக்கும் திட்டத்தையும், திருமதிலைச் சுற்றிக் கடைகள் கட்டும் திட்டத்தையும் தம் வேண்டுகோளுக்கிணங்க கை விட்டதற்கு மத்திய, மாநில அரசுகளுக்கு நன்றியைத் தெரிவித்தது.

ஆலய வரவு — செலவு கணக்குகளை சமய மக்கள் முன்னர் சமர்ப்பித்து, ஆலயத்திற்கு தேவையான நிதியை அவர்களிடம் பெறும் நன்கொடைகள் மூலமாக நிர்வகிப்பதுதான் சாலச் சிறந்தது என்றும் எனவே கோவிலைக் கண்டால் "கடையைக் கட்டு" என்ற மனப்பான்மையிலிருந்து ஆலயங்களைப் பாதுகாக்க முன் வருமாறு ஆஸ்திகப் பெருமக்களை இக்குழு வேண்டிக் கேட்டுக் கொள்கிறது என்றும், ஆலயங்கள், மடங்களின் நிலங்கள் சமய வளர்ச்சிக்காகவும், வழிபாட்டிற்காகவும், சமய பாதுகாப்பிற்காகவும் கோடிக் கணக்கான ஹிந்து மக்களால் அர்ப்பணிக்கப்பட்டு ஆலயங்களுக்கும் மடங்களுக்கும் சொந்தமானதானவை என்றும், இந்த நிலங்களை அரசு எடுத்துக் கொண்டால் மடங்கள், ஆலயங்களில் வழிபாடு நின்று போய் தார்மீகத் தரம் தாழ்ந்து சமயப் பற்று ஒழிந்து ஹிந்து சமுதாயமே சிதைந்து மறைந்து போகும் என்றும், எனவே மேற்படி ஆலய மட நிலங்களுக்கு உச்சவரம்பு சட்டத்தின் கீழ் விதிவிலக்கு அளிக்கப்பட மத்திய மாநில அரசுகளை இக்குழு கேட்டுக் கொள்கிறது என்றும் இது சம்பந்தமாக ஹிந்து சமுதாயத்தின் ஏகோபித்த எதிர்ப்பை உருவாக்க ஆவன செய்வது என்றும் இக்குழு முடிவு செய்கின்றது என்றும் தீர்மானங்கள் நிறைவேறின.

"இந்த பசலி குத்தகையை பசலி முடிவிலிருந்து ஆறு மாதத்திற்குள் செலுத்தி விட்டால் இது வரையில் பாக்கியுள்ள குத்தகைகள் முழுதும் தள்ளுபடி செய்யப்பட்டு விடும் என்று இயற்றியிருக்கும் மசோதா கோவில்கள், மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள் இவைகளை சரிவர நடத்தவியலாமல் ஆலயங்களை மூடும்படியான நிலை ஏற்படக் கூடியதாய் இருக்கின்றது. தஞ்சாவூர் மாவட்டத்தைப் பொறுத்த வரை கோவில் நிலங்களின் குத்தகை பாக்கி இச் சட்டத்தின் மூலம் இரண்டரை கோடி ரூபாய் வரை தள்ளுபடி செய்யப்படலாம் என்று அற நிலைய பாதுகாப்பு அமைச்சர் சொல்லியிருப்பது குறிப்பிடத் தக்கது.

"எனவே இந்த மசோதாவுக்கு ஒப்புதல் கொடுக்காதிருக்கும்படி கவர்னரையும், ராஷ்டிரபதியையும் கேட்டுக் கொள்ள வேண்டும் என்றும், இந்தத் தீர்மானத்தை அமல் நடத்த வேண்டிய காரியங்களை உடனடியாக செய்யவேண்டுமென்றும் இக்குழு தீர்மானிக்கிறது" என்று ஒரு தீர்மானம் நிறைவேறியது.

மடங்களுக்கு நிர்வாக அதிகாரிகளைப் போடுவது பற்றி அரசாங்கம் சட்டம் இயற்ற யோசிப்பதானது சமயத் தலைவர்களை அவமதிப்பது மட்டுமின்றி, அவர்கள் செய்யும் சமயப்பணியைக் கட்டுப்படுத்தும் முயற்சியாகும் என்றும், எனவே மேற்படி திட்டத்தைக் கை விடுமாறு இக்குழு வேண்டிக் கேட்டுக் கொள்கின்றது என்றும் மற்றொரு தீர்மானம் நிறைவேறியது.

மேலும் கீழ்க்கண்ட தீர்மானங்களும் நிறைவேறின.

வளர்ந்து வரும் விக்ரகத் திருட்டைத் தடுக்க கீழ்க்கண்ட நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளுமாறு அரசை நமது குழு கேட்டுக் கொள்கிறது.

விக்ரகம் களவு போன கோவிலின் டிரஸ்டிகள், அர்ச்சகர் உள் பட அனைத்து ஆலய சிப்பந்திகளையும் உடனடியாக வேலையிலிருந்து நீக்கப்பட வேண்டும்.

விக்ரகம் திருடிய, அதில் சம்பந்தப்பட்ட அதை வாங்கி விற்பனை செய்த அனைவரின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட வேண்டும்.

விக்ரகம் திருடியவர்களுக்கு தூக்கு தண்டனை அல்லது கடும் தண்டனை அளிக்கப்பட வேண்டும்.

இது சம்பந்தப்பட்ட அல்லது கைது செய்யப்பட்டவர்களின் முழுப் பெயர், விலாசம் பத்திரிகையில் விளம்பரம் செய்யப்பட வேண்டும்.

சிலை திருடு சம்பந்தமாக தகவல் கொடுப்பவர்களுக்கு ஏராளமான பரிசுகளை கொடுத்தல்.

இந்தக் கலை சிறப்புப் பொருட்களை அதிக விலை கொடுத்து வாங்கும் அமெரிக்கா, பிரான்ஸ் ஆகிய நாட்டு மக்களுக்கு நமது மாநில அரசு மேற்படி விக்ரகங்களை

வாங்க வேண்டாம் என்று வேண்டுகோள் விடுத்தும் அதற்கிணையான விக்ரகங்களை புதியதாகச் செய்து மிக குறைந்த விலையில் அனுப்பத் தயார் என்று விளம்பரங்களை வெளியிடல் ஆகிய நடைமுறைகளைக் கையாளுமாறு குழு மாநில அரசைக் கேட்டுக் கொள்கிறது.

**கோவில் வரவு — செலவு கணக்கை வெளியிடுக**

“இன்றைக்கு ஆலயத்திற்கு வரும் வருமான வகைகள் என்ன, அவை எது எதற்கு செலவிடப்படுகின்றன, அந்த ஆலயத்திற்குச் சொந்தமான நிலங்கள், சொத்துகள், அன்பளிப்பாக வழங்கப்படும் நகைகள் ஆகிய விவரங்களை பற்றி அந்த ஊர் மக்களுக்கே தெரிவதில்லை. இந்த இருட்டடிப்புநிலை கணக்குகளை மிகப்படுத்தி எழுதவும் வீடுகள், நிலங்கள் இவைகளை லஞ்சம் பெற்றுக் கொண்டு குறைந்த வாடகைக்கு விடவும், நிர்வாகத்தில் ஊழல்கள் மலியவும் ஏதுவாக உள்ளது. இவைகளை ஓரளவு தவிர்த்து நேர்மையான நிர்வாகம் நடக்க ஒவ்வொரு ஆண்டும் அந்த ஆலயத்தின் வரவு—செலவு கணக்குகள் மற்ற விவரங்கள் ஆகியவற்றை அச்சிட்டு அக்கோயிலின் கட்டளைதாரர்கள், அவ்வூரிலுள்ள சமய ஸ்தாபனங்கள், நகரத்திலுள்ள ஆஸ்தீகப் பிரமுகர்கள் ஆகிய குறைந்தபட்சம் மொத்தம் 100 நபர்களுக்குக் குறையாமல் அனுப்பும் முறையை ஏற்படுத்தி அதனை அமல் நடத்துமாறு அக்குழு அறநிலைய இலாகா அமைச்சரை வேண்டுகின்றது.

இது போலவே கும்பாபிஷேகம் நடந்த கோவில்களின் வரவு — செலவு கணக்கை முடித்து பிரசுரிக்க ஆவன செய்யுமாறு இக்குழு வேண்டுகின்றது.

**தனித்தியங்கும் போர்டார்**

அரசாங்கக் குறுக்கீடின்றி ஆகமங்களுக்கு ஏற்ற முறையில் ஊழலற்ற செம்மையான நிர்வாகம் நடக்க ஒரே வழி, ஹிந்து மடங்களையும், ஆலயங்களையும் தனித்தியங்கும் ஒரு போர்டார் வசம் ஒப்படைப்பதுதான். அரசாங்கம் இதற்கு உடனே இசையவேண்டுமென்று கோருவதுடன் இக்குறிக்கோள் நிறைவேறும் வரை இடையறாது போராட வேண்டுமென்று ஹிந்து பெருமக்களை இக்குழு அறை கூவி அழைக்கிறது.

**கூடலழகர் தெப்பக்குளம்**

மதுரை மாநகரில் உள்ள கூடலழகர் பெருமாளுக்கு சொந்தமான டவுன் ஹால் ரோடிலுள்ள தெப்பக்குளத்தை அழித்துவிட்டு அந்த இடத்தில் சூப்பர் மார்க்கெட் கட்ட அரசு உத்தேசித்திருப்பதை இக்குழு வன்மையாகக் கண்டிக்கிறது. மக்கள் இந்த நாத்திக முயற்சியால் கொதிப்படைந்துள்ளார்கள். ஆகவே அரசு இம்முயற்சியை கைவிடுவதுடன், உடனடியாக அந்த தெப்பக் குளத்தை பழுது பார்த்து சுற்றியுள்ள கடைகளை அகற்றி தெப்பத் திருவிழா நடத்துவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் இக்குழு அரசைக் கோருகின்றது.

# அறிவின் ஆற்றல்

மஹரிஷி
ஸ்ரீ அரவிந்தர்

நுண் கலையின் பணி இயற்கையைப் பார்த்து அப்படியே பழகுவதாய் இருந்தால், ஓவியக்கலைக் கூடங்களை எரித்துவிட்டு அவற்றிற்கு மாருகப் புகைப்படச்சாலைகளை அமைத்து விடலாமே. இயற்கையன்னை மறைத்து வைத்திருப்பதை நுண்கலை புலப்படுத்துகின்றது. அக்காரணம் பற்றியே நிதிக் கிழவர்களின் அணிகலன்களைக் காட்டிலும், வேந்தர்களின் செல்வக்குவியல்களைக் காட்டிலும் சாலச் சிறந்ததன்ரோ ஒரு சிறு ஓவியம்.

கட்புலனுக்குக் காட்சியளிக்கும் இயற்கையை அப்படியே வரைந்தோமானல் அது ஒரு சவமாகவோ அல்லது உயிரற்ற வடிவமாகவோ கோர உருவமாகவோ தோன்றிவிடும். கட்புலனுக்கும், ஐம்புல உணர்விற்கும் அப்பாலுள்ள ஒன்றில்தான் உண்மை உறைந்திருக்கின்றது என்பதை ஓர்வாய்.

கவிஞனே, கலைஞனே! இயற்கை யன்னையை ஒரு கண்ணாடி நிழல்போல் அமைப்பாயேயாகில் உன் பணியில் அவள் இன்புறுவாளோ? மாருகத் தன் திருமுகத்தை அவள் திருப்பிக் கொண்டு விடுவாள் என்பது திண்ணம். அவளுக்கு என்ன நீ காட்டுகின்ருய்? அவளையோ? இல்லை, உயிர்ச் சுடரற்ற உரு, நிழல், போலிச்சாயை இவற்றைத் தவிர பிறிதுண்டோ? இயற்கையில் கரந்து நின்ற ஆன்மாவைச்

சிக்கெனப் பிடித்தல் வேண்டும். அழியாச் சின்னத்தில் கோயில் கொண்ட உண்மையை இடையருது தேடித்திரிவாய். உனக்கென ஒரு கண்ணுடியும் இல்லை. நீ நாடுகின்ற அந்த அன்னைக்கும் அவ்வண்ணமே இல்லை.

முரண்படாத பொதுமையை, கிரேக்கக் கவிஞர்களைவிட ஆங்கில நாடகாசிரியர் ஷேக்ஸ்பியர் மிகுதியாகச் சித்திரித்துள்ளார். நாய் தொடரும் லான்ஸ்லாட் காபோவிலிருந்து, வேந்தன் லீயர், இளவரசனுன ஹாம்லெட் இப்பாத்திரங்கள் வரையிலுள்ள படைப்புக்கள் அனைத்தும் பொதுமை வாய்ந்த அச்சுக்களாய் மிளிர்கின்றன.

நுண்ணிய தனிச்சிறப்புக்களை யகற்றியே கிரேக்கக் கலைஞர்கள் பொது இயல்பை நாடினுர்கள். பாத்திரங்களின் தனிச் சிறப்பு வாய்ந்த அம்சங்களைப் பொதுமையாக்கியே அத்தகைய சிறப்பை அடைவதில் அவர்களைவிட வெற்றி கண்டார், ஷேக்ஸ்பியர். எந்தக் கருவியை வைத்துக் கொண்டுஇயற்கையன்னை வரம்பு கடந்த இறைவனை மறைக்கப் பார்க்கின்ருளோ அக்கருவியையே பயன்படுத்திக் கொண்டே மனிதனிடத்தில் உறையும் எண்ணிறந்த குணங்களை மன்னுயிர் கண் காணப் புலப்படுத்திவிட்டார்.

'இயற்கை அன்னைக்குக் கண்ணுடி காட்ட வேண்டும், உண்மை தெரியவே' என்று இயம்பிய ஷேக்ஸ்பியர், அவ்வண்ணம் செய்யாத ஒரு கவிஞுவர். ஒரு நகலையோ, ஒரு புகைப்படத்தையோ அல்லது ஒரு நிழலையோ படைப்பதற்கு எஞ்ஞான்றும் கலைத்துறையில் அவர் இறங்கவில்லை. பால்ஸ்டாப், மாக்பெத், லீயர், ஹாம்லெட் இத்தகைய படைப்புக்களை இயற்கையின் வெறும் நிழல்கள் என ஒருவன் கண்ணுறுவானுயின் அவன் ஆன்மாவில் அகக்கண்ணற்றவனுய் இருத்தல் வேண்டும் அல்லது ஒரு குறிப்புச் சொல்லால் மதி மயங்கிக்கிடக்கவேண்டும்.

ஒரு பால்ஸ்டாபையோ, ஒரு மாக்பெத்தையோ அல்லது ஒரு லீயரையோ பிரகிருதியில் ஒருவன் காணமுடியுமோ? இப்பாத்திரங்களின் நிழல்களையோ அல்லது குறிப்புக்களையோ தான் இயற்கையன்னை பெற்றிருக்கிருள். இயற்கையன்னை காணமுடியாதபடி இப்பாத்திரங்கள் வானுற ஓங்கி நிற்கின்றன.

இறைவன் அருளைப் பெற்று அதன்பால் ஈர்க்கப்பட்டவனுக்கும் எதையும் அயிர்த்து நாத்திகமே உண்மையெனத் தேர்ந்து அறிவொளியை நாடுகின்றவனுக்கும் உய்விடம் உண்டு. சடங்குச் சமயிகளுக்கும் கிளிப்பிள்ளைபோல் விடுதலை பெற்ருேரின் தடையற்ற கருத்துக்களைப் பிதற்றுவோர்க்கும் உண்மைக் கபாடம் திறக்குமோ? அவர்கள் சவமனைய உணர்ச்சியற்றவர்கள். மரணத்

தைப் பின்பற்றிஞலும் அம்மர ணத்தையே உயிர்த்துடிப்பு என் கிருர்கள்.

அறிவுரை பெற ஒருவன் ஒரு விஞ்ஞானியிடம் வருகின்ருன். அவ்வறிவுரை வழங்குவோன் அவனுக்கு, நுண் பொருள்மானி, தொலேமானி இவை புலப்படுத் தியவைவயைக் காண்பிக்கிருன். ஆஞல் அம்மனிதன் நகைத்து பின்வருமாறு கூறலாயிஞன்: "நீங்கள் ஒரு கருவியாகப் பயன் படுத்திய கண்ணுடி, கண்ணின் மீது எழுப்பிய மாயங்களே தவிரப் பிறிதில்லே. என் வெறும் கண்ணுக்கு இந்த அற்புதங்கள் புலப்படாத வரையில் நான் நம்பவே மாட்டேன்'' என்று. பல சார்பான நிகழ்ச்சிகளேக் கொண் டும் சோதனேகள் வாயிலாகவும் தாம் கொண்ட அறிவை நம்பக் கூடும் வகையில் மெய்ப்பித்தார். அப்பொழுதும் அந்த மனிதன் எள்ளி நகையாடிஞன். "தாங்கள் சான்றுகள் என்று கருதுபவை நான் ஒற்றுமைகள் என்று ஓர்வேன். பல ஒற்றுமைகள் ஒரு சான்ருக ஆகா. தாங்கள்நடத்திய சோதனேகள் யாவும் இயல்பிகந்த நிலேயில்தான் நிறைவேறின. இவை யாவும் பித்தேறிய இயற்கை தந்த வளமே.'' கணிதம் நல்கிய விளேவுகளே அவன் முன் நிறுத்திய பொழுது அவன் சீற்றம் மிகுந்து உரக்க முழங்கிஞன்; "பார்க்கப்போஞல் இது ஒரு ஏமாற்றம், பிதற்றல், மூடநம் பிக்கை. அறிவிற்கு மாருய்ச் சூழ்ச்சி செய்யும் எண்களுக்கு ஓர் ஆற்றலும் ஒரு பொருளும் இருக் கும் என்பதை நாம் நம்பும்படி முயல்கின்ருயா? அது இயலாத காரியம்'' இவை யாவையும் செவி யுற்ற அந்த விஞ்ஞானி இவன் தீர்க்க முடியாத ஓர் அறிவிலி யென்று கருதி அவனே அடித்துத் துரத்தி விட்டான். அவன் மறுப்பு வாதத்தின் ஒழுங்கையும், மறுக் கும் பகுத்தறிவின் முறையையும் இவன் காணவில்லேயன்ருே? திறந்த மனப்பண்பாடு, நடுநிலே - இவற்றை அடிப்படையாகக் கொண்ட ஆய்வை ஏற்க விழை யாத இடத்துப் பல அசைகளு டைய ஆடம்பரச் சொற்களே வைத்தே உன்னுடைய மறுப்பை மூடிமெழுகி விடலாம், அல்லது பல சோதனேகளேயும் நிலேமை களேயும் ஒருவன் மீது சுமத்தி அவன் ஆய்வையே எள்ளி நகை யாடிப் பயனற்றதாகச் செய்து விடக்கூடும்.

நம்முடைய உளங்கள் பிரகிருதி யில் சிறையுண்டு கிடக்கின்ற பொழுது பிரகிருதிதான் உண்மை யென்று அவை கருதுகின்றன. ஜட நிலேயற்ற சித்சக்தியின்பால் பிரகிருதியிலிருந்து அவற்றை ஈர்க்கும் பொழுது பிரகிருதியை ஒரு முகத்திரையென்று அவை உன்னுகின்றன. சித்வாழ்வே தான் உண்மையென அவற்றிற் குத் தோன்றுகின்றது. இவற்றில் எது உண்மை? இன்னும் கூறு மிடத்து இறைவன்தான் அறிவன் என்ற முடிவுக்கு வருவோம். இவ்விரண்டுஅனுபவங்களே எய்தி

யவன்தான் அறிவுத்துறையில் எது மிகுந்த வளமுடையது, எது உயர் ஆற்றல் வாய்ந்தது? எது மேலான இன்பம் பயப்பது? என்பனவற்றை எளிதில் இயம்பக் கூடும்.

ஜடநிலையுணர்வைக் காட்டிலும் உண்மை வாய்ந்தது சித்நிலைதான் என்று நான் நம்புகின்றேன். என் கட்புலன் காணாத எது ஒன்று ஜடத்தில் கரந்து நிற்கின்றதோ அதைச் சித்சக்திவாயிலாக நான் உணர்கின்றேன். ஜடத்தில் மனம் எதைக் காண்கின்றதோ அதன்மீது நான் ஏவல் புரியவும் கூடும்.

நரகமும் சுவர்க்கமும் ஆன்ம உணர்வில்தான் நிற்கின்றன. ஏன்? வையகமும் அதன் நிலங்களும் கடல்களும், கழனிகளும் பாலைவனங்களும், மலைகளும் ஆறுகளும் அந்த சைதன்யத்தில்தான் சுடர்விடுகின்றன. ஆன்ம நோக்குதற் பொருட்டே இவ்விரு நிலம் இப்படி அமைந்ததே தவிரப் பிறிதில்லை.

ஒன்றே ஆன்மா, ஒன்றே சத்து. புறமெலாம் ஒன்றே காட்சி. ஆயினும் பல மனத்தின் சிக்கல்களும் அகந்தையின் விளைவுகளும் சித்சத்தில் உறைகின்ற காரணத்தால் ஒரே பரம்பொருளைப் பல ஒளிகளாகவும் பல நிழல்களாகவும் நாம் காண்கின்றோம்.

கருத்தியல் வாதி தவறுகின்றான். இப்புவிகளைப் படைத்தது மனமன்று. மனத்தைப் படைத்த ஒன்றே இவற்றை அமைத்தது என்று உணர்வாய். படைக்கப் பட்டதை முற்றிலும் காணாது சில அம்சங்களைக் கொண்டே உணர்த்துவதால் மனம் கண்டது உண்மை நோக்கமன்று.

ராமகிருஷ்ணர் இப்படி இயம்பினார், விவேகானந்தர் இப்படி விளம்பினார் என்றெல்லாம் கூறுவர் மக்கள். அவதார புருஷர்கள் வாய்மொழியில் பெய்யாத உண்மைகளையும் தம்முடைய நூல்களில் சொல்ல மறந்த தத்துவங்களையும் நான் அறிய விரும்புகின்றேன். இதுவரையில் உளம் உன்னாத நா நவிலாத ஒன்று இறைவனிடத்தில் இலங்குகின்றதன்றோ?

தெய்வச்சுடர் திகழ் மனித வடிவமே ராமகிருஷ்ண பரமஹம்ஸர். இந்த வடிவத்திற்குப் பின் மிளிர்பவை ஆண்டவனின் அகண்ட அருவமும் அகண்ட உருவமுமே. சிவபிரானின் ஒளி மிக்க கடைக்கண் பார்வையன்றோ விவேகானந்தர். அவர் பின் மின்னுவது தெய்வ அருள் நோக்கே. அவரும் அவரை ஈந்த அரனும், அயனும், மாலும், எல்லாவற்றையும் கடந்த ஓங்கார வடிவமும், அம் மாபெரும் சுடர்க் கடலில் எழுந்த அலைகளே.

மனித வடிவத்தில் தோன்றிய கண்ணபிரானை உணராதார் ஆண்டவனை முற்றிலும் அறிந்தவரல்லர். கண்ணனை மட்டும் அறிபவர், கண்ணனையும் அறிந்தார்களில்லை. இதற்கு மாறுபட்ட தத்துவமும் முற்றிலும் உண்மையே. வண்ணமும், வனப்பும், மணமும் அற்ற ஒரு சின்னஞ்சிறிய மலரில் இறைவனை ஒருவன் காண்பானாயின் அந்தப் பரம் பொருளைச் சிக்கெனப் பிடித்தவனாவான்.

பயனற்ற பொருளற்ற வரட்டு வேதாந்த வலைகளிற் சிக்காமல், அவற்றைப் புறக்கணிப்பீர். பசையற்ற பாழான அறிவாம் புழுதி உம்மீது படியாவண்

ணம், அகன்றே நிற்பீர். நல்லியல்பும் நற்செய்கையும், வாய்ந்து அரும்படைப்பையும், அமர வடிவையும் இடையருத இன்பத்தையும் நல்குகின்ற முறையிலே பயன்படுத்திக்கொள்ளும் அறிவே சாலச் சிறந்ததாகும்.

நீ கண்ட அறிவிற்கேற்றபடி ஒழுகி, அவ்வறிவு மயமாய் அமைவாய். எஞ்ஞான்றும் உன் உளத்தில் உறைகின்ற உத்தமனும் உன்னறிவென உன்னுவாய்.

பரிணமம் அல்லது விரிதல், இதற்கு இறுதி உண்டோ? அறிவென்பதும் கடைசிச் சொல்லாமோ? பகுத்தறிவு படைத்த விலங்கின் உருவமும் இயற்கையன்னையின் இனிக் காணரிய மௌலியாய் இலங்குமோ? விலங்கினச் சாலையில் மனிதன் எழுந்தான். மனித உலையில் மானுடம் கடந்த பேராளன் உதிப்பான் என்பது திண்ணம்.

கடுமையான நெறியைத் தளராது பின்பற்றும் ஓர் ஆற்றலே சுதந்திரத்தின் அடிப்படையாகும். ஒரு தெய்வத்தின் முதிர்ந்த சுதந்திரத்தை ஓர் ஆன்மா எய்துவதற்குமுன், ஐம்புலன்களை அடக்குகிற அறத்தை நிறைவேற்றுதற் பொருட்டு ஒழுக்க விதிகளின் வெம்மையைப் பொறுத்தே தீரவேண்டும். சுதந்திரத்தோடே தொடங்குகின்ற விதிகள் இயற்கையாகவே தளையற்ற மாபெரும் சான்றோர்களுக்கே அமையும், அல்லது முற்பிறப்பில் சுதந்திரத்தை நிலைநாட்டியவர்களுக்கும் இது ஒவ்வும்.

தட்டுத் தடங்கலற்ற முதிர்ந்த அறிவு வாய்க்கப் பெற்ற நோக்கத்துடன் உணரப்படுகின்ற நியதியை — தம்மீது தாமே சுமத்திக் கொண்ட நியதியைப் பெருத குறைபாடுடையவர்கள் — பிறருடைய சங்கற்பத்திற்குத் தம்மை அடிமைப்படுத்திக் கொள்ளத்தான் வேண்டும். நாடுகள் அடிமை நாடுகளாக நிலவுவதற்கு இதுதான் முக்கிய காரணமாகும். ஒரு தலைவனின் அடிக்கீழ்ப்பட்டு அடங்கா அகந்தை நசுங்கிப் போகுமாயின், அவர்களுக்குச் சுதந்திரம் நல்கப்படுகின்றது; அல்லது அவர்களிடத்தே ஓர் ஆற்றல் இயங்குமாயின், சுதந்திரத்தைக் கொண்டே சுதந்திரத்தை எய்தும் புதியதொரு வாய்ப்பை அவர்கள் பெறுகின்றனர்கள்.

[நன்றி: ஞானதீபம்.



ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமனுஜன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17